# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை



சிலம்பு-சகூ] வள்ளுவர் ஆண்டு உ00உ, கார்த்திகை (Dec'71) [பரல். -௪

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

# திருநெல்வேலி, குமரகுருபரர் குழந்தைப்பள்ளி நான்காவது ஆண்டு விழா 30-11-1971



திரு. பி. பத்மநாபன், எம். எல். ஏ., அவர்கள்
தலைமையில் திரு. கா. வ. முத்தையாபிள்ளை
அவர்கள் வரவேற்புரை நிகழ்த்துதல்.



பள்ளிக் குழந்தைகள் கிளர்ச்சியுடன் நடித்துக் களிப்பூட்டுகின்றன.

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு சசு | திருவள்ளுவர் ஆண்டு உ00உ, கார்த்திகை நவம்பர் 1971 | பரல் ச |
|---|---|---|


## பதிப்புத் துறையிற் பட்டறிவு

(எ)

சென்றவிதழில் திருவிளையாடற் புராணத்தின் பழம் பதிப்புக்களைப் பற்றிய குறிப்புக்களைக் கண்டோம். இதன்கண் திருவாளர் நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் பெருஞ்சொல் விளக்கனுர் அ. மு. சரவண முதலியாரவர்களைத் துணைக்கமர்த்தி எழுதிய திருவிளையாடற் புராணம் பதவுரை விளக்கவுரை பற்றியும் இவ்வுரைவழித் திரு. சரவண முதலியாரவர்களின் வாழ்க்கையில் தமிழுக்கும் சைவத்துக்கும் தொண்டுபுரியும்பொருட்டு ஏற்பட்ட சிறந்த திருப்பம் பற்றியுமுள்ள செய்திகளை யறிவோம்.

கழக அமைச்சர் திரு. வ. திருவரங்கனுர் தாம் வாங்கி விற்று வந்த திரு. தி. க. சுப்பராய செட்டியார் அவர்கள் உரையுடன் கூடிய திருவிளையாடற் புராணப் பதிப்பு முற்றிலும் தீர்ந்து போயினமையால் 1925 ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் இக்காலத்திற் கேற்றபடி திருவிளையாடற் புராணத்துக்குச் செந்தமிழில் திருத்தமான முறை தழுவிய ஓர் உரை எழுதப் பெறுதல் வேண்டுமென்று கருதினுர்கள். கருதவே இலக்கண இலக்கியப் புலமையும் சமய நூற்புலமையும் ஒருங்கே வாய்ந்தவரும் அன்பு அறநெறி ஒழுக்கங்களிற் சிறந்தவரும் எளிய இனிய செந்தமிழ் உரை நடை எழுதும் வன்மையுடையவருமான திருச்சி பிஷப் ஈபர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் பண்டித நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களைத் திருவிளையாடற் புராணத்துக்கு உரை எழுதித் தருமாறு

வற்புறுத்தி வேண்டினர். அவர்களும் திருவருளிருந்த வாறென்னே என்று ஒப்புதலளித்தனர். திரு. பிள்ளையவர்கள் மிக்க மகிழ்ச்சியுற்று முன்னமே வெளிவந்துள்ள திருவிளையாடல் மூலப் பதிப்புக்களையும், உரையோடு கூடிய பதிப்புக்களையும் திரு. நாட்டாரவர்கட்கு அனுப்பிவைத்தனர்.

இவ்வுரை எழுதுவதற்குத் தமக்குத் துணையாக லாலுகுடி திரு. அ. மு. சரவண முதலியாரவர்களை அமர்த்த விரும்புவது பற்றித் திரு. வ. திருவரங்கனுர்க்கு 6-9-1925இல் திரு. பண்டித நாட்டாரவர்கள் எழுதிய கடிதத்திலுள்ள பகுதியைக் கீழே குறிப்பிடுவது இன்றியமையாததாகும்.

“எழுத்து வேலைக்குத் துணையாக லாலுகுடியிலிருக்கும் அன்பர் திரு. சரவண முதலியாரவர்களையே நான் கருதி அவர்களிடங் குறிப்பிட்டுமிருக்கிறேன். என் பக்கத்தில் இருக்கும் விருப்பம் அவர்கட்கு உண்டாகையால் அவர்களும் தமது வேறு அலுவல்களை யொதுக்கி இதற்கு இணங்கிவரக் கூடும். அவர்கள் நல்ல நூற்பயிற்சியும் கூரிய அறிவும் உடையராதலின் மிகவும் பொருத்தமுடையாராவார்கள். அவர்கட்கு மாதம் ரூபா முப்பதுக்குக் கீழ் இன்றியும் முப்பத்தைந்துக்கு மேற் போகாமலும் கொடுத்து வருதல் பொருத்தமா யிருக்குமென எண்ணியிருக்கிறேன். அவர்கள் இணங்கி வந்துவிட்டால் நாம் கருதிய [1]புராணங்கட்கு உரைகள் எழுதி விரைவில் நிறைவேற்றிவிடலாமென்ற எண்ணம் எனக்குண்டு.

“தங்கட்குத் தமிழை முன்னுக்குக் கொண்டு வருவதில் உள்ள ஆர்வமும்; தங்களது பேரூக்கமும் எனக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளிக்கின்றன, [2]தம்பியாரும் திருவருளால் விரைவில் குணமுற்றுத் தங்கள் முயற்சிக்குத் துணையாயிருந்து ஊக்குவரென்பதும் தாங்கள் எண்ணியவெல்லாம் இனிதின் நிறைவேறும் என்பதும்

---

1. பெரியபுராணமும், கந்தபுராணமும் ஆகும்.

2. தம்பியார் என்பது தமியேனையே குறிக்கும். யான் 1925 மே திங்களில் கொடிய இருமல் நோயுற்று உடம்பு மிகவும் மெலிந்த நிலையில் என் சொந்த ஊராகிய பாளையங்கோட்டையில் மூன்று திங்கள் சம்பளத்துடனும் ஒரு திங்கள் சம்பள மின்றியும் விடுமுறை எடுத்துத் தங்கிக் கைதேர்ந்த சித்த மருத்துவர் ஒருவரிடம் மருந்து வாங்கி உண்டு நலம் பெற்றேன். நான்கு திங்கட்குப் பின் நெல்லைத் தலைமை நிலயத்திலே ஆறு திங்கள்வரை பணியாற்றினேன். இதுவே யான் சென்னையை விட்டுத் தொடர்பாக நீண்டகாலம் நெல்லையில் தங்கியதாகும்.

என் உறுதியான எண்ணம். உண்மை என்பதொன்றுள தாயின் அதனுல் ஆகாத காரியமொன்றில்லை. வேறு ஆதல் குறித்தும் நாம் சிந்திக்க வேண்டியதில்லை. உண்மைக்குப் பரிசில் உண்மையே யாகட்டும்.''

திருவாளர் சரவண முதலியாரவர்கள் தாம் லாலுகுடியில் நடத்திவந்த துணிக்கடையை முடித்துவிட்டு 26-11-1925 இல் திருச்சிக்கு வந்து திருவிளையாடற் புராணத்துக்குத் திரு. நாட்டாரையா அவர்களைக் கலந்து பதவுரை எழுதி வரலானுர்கள். திரு. நாட்டாரையா அவர்கள் பதவுரையினைச் சரி பார்த்துத் திருத்துவதோடு விளக்கவுரை எழுதி வந்தார்கள். இவ்வுரையினை முன் உரைகளைவிடச் சிறப்பாகத் தாம் அமைத் திருப்பது பற்றித் திருவிளையாடற்புராணம், மதுரைக் காண்டத்தின் முகவுரையில் எழுதியிருப்பதை அடியிற் காண்க.

''பல பதிப்புக்களை ஒத்துநோக்கி மூலத்தின் வேறு பட்ட பாடங்களுட் சிறந்ததெனத் தோன்றுவதை அமைத்துக்கொண்டு பிறவற்றைப் பாடபேதமாக அமைத் திருக்கிறேன். இந்நூற் செய்யுட்களின் இடர்ப்பட்ட சொற்பொருள் முடிபுகளை ஒழுங்கு படுத்துவது இன்றி யமையாதவும் ஒத்த கருத்துள்ளவுமாகிய பிற நூன் மேற் கோள்களை எடுத்துக் காட்டி விளங்க வைப்பது முதலிய வற்றில் எவ்வளவு அருமுயற்சி யெடுத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதும் இவ்வுரை எவ்வளவு திருத்தம் பெற் றுள்ளதென்பதும் நடுநிலை முதலிய உயர்குணங்களுடை யராய் ஒத்துநோக்கும் அறிவுடையாரெவர்க்கும் நன்கு புலனுமாகலின் இங்கு அவைகள் எடுத்துக்காட்டப் பெற்றில.''

இவ்வுரை நூலை அச்சிடுவதற்கு மிகுதியான பொருள் வேண்டி யிருத்தலால் இதனை ராயல் 8 பக்க அளவில் தொண்ணூற்ருறு பக்கங்கள் கொண்ட தனித்தனிப் பகுதி களாக வெளியிட்டோம். 6 பகுதிகட்குச் சிலரும், 12 பகுதி கட்குச் சிலருமாக இருநூறு பேர்கள் வரை முன்பணமனுப்பி யுதவினுர்கள். பன்னிரண்டு பகுதிகள் வெளிவந்தபின் திருவிளையாடல் மதுரைக் காண்டம், கூடற் காண்டம், திரு வாலவாய்க் காண்டம் ஆகிய மூன்றையும் தனித்தனியாகத் துணிக் கட்டடஞ் செய்து விற்பனை செய்யலாயிற்று. ஓவியம் எழுதுவதில் மிகவுந் திறமைமிக்க ஓவியர் திரு. ஆ. செகந்நா தாச்சாரியாரவர்கள் எழுதித்தந்த பிள்ளையார் திருவுருவப் படமும், சிவபெருமான் திருவுருவப் படமும், 64 திருவிளை

யாடல்களை விளக்கும் படங்களும் வழுவழுப்பான வெள்ளைத் தாளில் அச்சிடப்பெற்று நூலின்கண் சேர்க்கப் பெற்றன. அவை படிப்பவர்கட்குக் கவர்ச்சியும் பத்திச் சுவையும் ஊட்டுவ வாயின.

6—8—1926இலும் 1—4—1927இலும் திரு. நாட்டா ரையா அவர்கள் எழுதிய அட்டைக் கடிதத்திற் கண்ட செய்திகள் முறையே வருமாறு :

"திரு. அ. மு. ச. அவர்கள் திருத்தினுலும் நானும் ஒரு முறை பார்த்தே அனுப்புகிறேன். ஒரு முறைதான் நான் பார்க்காமல் வந்துவிட்டது. இனி நான் பார்த் தனுப்ப எண்ணுகிறேன். இன்னும் இரண்டு மூன்று நாட்களில் எழுதிய உரைப்பகுதிகளை அனுப்புகிறேன்.

உரை முதற்பகுதி வரப்பெற்றேன். படங்களும் அச்சு முதலியவெல்லாமும் மிக்க வனப்புடன் மிளிர்கின்றன."

"மதுரைக் காண்டம் பயிண்டான புத்தகம் இரண்டும் வந்தன. புத்தகம் கண்ணைக் கவர்கிறது. திரு. அ. மு. ச. அவர்கட்கு ஒன்று கொடுத்துவிட்டு யான் ஒன்று வைத்திருக்கிறேன். திருவிளையாடல் பதவுரை பூர்த்தி யாகிவிட்டது. திரு. முதலியாரவர்கள் ஏப்ரல் முடிய இவ்வூரில் இருந்துவிட்டுப் பின் லாலுகுடிக்கே போக இருக்கிருர்கள். பெரியபுராண வேலை என்ருல் தொடங்க முடியவில்லை யாகையால் அவர்களை இங்கு வைத்துக் கொள்ளக் கூடவில்லை."

திரு. முதலியாரவர்கள் எழுதி வந்த பதவுரை திரு. நாட்டாரையாரவர்கட்குப் போதிய அளவு மனநிறைவு தர வில்லை என்பது அவர்கள் 21—8—1926இல் எழுதிய கடிதத்தால் தெரிகின்றது.

"பதவுரையைத் திருத்துவதிலேயே காலக்கழிவு ஏற்படுகிறது. இப்போது இடைவிடாது இதிலேயே கருத்தைச் செலுத்தியுள்ளேன். எப்படியும் ஏழெட்டு மாதத்தில் எழுதி முடிக்கக்கூடும். பதவுரை வேலை மித மாகவேதான் நடப்பதாகச் சொல்லவேண்டும். எப்படி யாவது காரியம் நடக்கட்டும் என்றும் இரண்டு மூன்று திங்கள் அதிகமாளுலும் ஆகட்டும் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறேன். பெரியபுராணம், தணிகைப்புராணம் உரைகளை வேறு எம்முறையாகவேனும் நடத்தலாமா

என ஆலோசிக்க வேண்டும். ஆனால் பெரியபுராண உரையில் எல்லா எழுத்தும் என் கைப்படவே இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.''[1]

திருவிளையாடல் உரை முடிந்தபின் திரு. நாட்டாரையா அவர்கள் பெரியபுராண உரையினை எழுதாது விட்டது கழக அமைச்சர் திருவரங்கனாரவர்கட்கு ஏற்பட்ட இரண்டாவது ஏமாற்றமாகும். முதல் ஏமாற்றம் எப்போது எதனால் ஏற்பட்டது என்பதை அறிவோம்.

1918இல் திரு. திருவரங்கனார் அவர்கள் கொழும்பில் நெல்லைப் பெரு வணிகர்கடை ஒன்றில் தலைமை எழுத்தராகப் பணி புரிந்தபோது பல்லாவரம் மறைமலையடிகளாரைக் கொண்டு சேக்கிழார் பெரியபுராணத்துக்கு விரிவுரை எழுதச்செய்து பகுதி பகுதியாக வெளியிட வேண்டுமென்று விரும்பி அவர்களும் நண்பர் சிலரும் மறைமலையடிகளாரை வேண்டிக் கொண்டார்கள். அவ் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு அடிகளார் அச்சிட்டு அனுப்பிய அறிக்கை வருமாறு:

''பொது நலன் கருதியுழைக்கும் பேரன்பர்காள்!

பழைமையானதும், உண்மை வரலாறுகளை உயர்ந்த தெளிதமிழிற் கூறுவதும், சைவ சித்தாந்த உண்மைகளை நன்கு விளக்குவதுமாகிய ''பெரிய புராணத்''திற்கு

---

1. ''பெரியபுராண உரையில் எல்லா எழுத்தும் என் கைப்படவே இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது'' என்று உயர்திரு நாட்டாரையா அவர்கள் எழுதியதைக் கவனிக்கிறபோது இலக்கியங்கட்கு உரையெழுதுவதென்பது இலக்கண இலக்கியப் புலமை யுடையாரெவர்க்கும் இயலுவதன்று எனக் கருத வேண்டியதாகிறது ஒருவர் ஆழ்ந்த இலக்கண இலக்கியப் புலமையுடைய வராகவும், அவைகளிலே கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்ச் சொற்பொழிவாற்றக் கூடியவராகவும், பல்வகைப் பாவினத்தில் செய்யுளியற்றுந் திறனுடையவராகவும், தூய தமிழில் உரைநடை நூல்கள் எழுதக் கூடியவராகவு மிருக்கலாம். ஆனல் இலக்கியத்துக்குப் பழைய உரையாசிரியர்களைப் போல மரபுவழி நின்று உரை எழுதக் கூடிய திறமை அவருக்கு இருக்குமென்று சொல்ல முடியாது. புலவர்களில் ஒரோவொரு சிலர்க்குத்தான் நூலாசிரியர் கருத்தறிந்து உரை வரையும் ஆற்றலிருப்ப தறிகின்றோம். மறைத்திரு மறைமலையடிகளார் ஒருவர்தாம் இலக்கண இலக்கியப் புலமையோடு நூலாசிரியராகவும், உரையாசிரியராகவும், சொற்பொழிவாளராகவும், கட்டுரை யாசிரியராகவும், நாடகவாசிரியராகவும், செய்யுளியற்றுந் திறனுடையவராகவும், திறனாய்வாளராகவும், மொழிபெயர்ப்பாசிரியராகவும் விளங்கி நீடு புகழ் பெற்றார் என்பது கற்றுணர்ந்தா ரெல்லாரும் ஒப்பவறிந்த வொன்றாகும்.

உரைப்படிகள் அகப்படுவதில்லை யாகையால் அன்பர்கள் பலரும் கடிதவாயிலாகவும், நேரிலும் மேற்படி புராணச் செய்யுளுக்கு விரிவுரை எழுதி வெளிப்படுத்தும்படி என்னைக் கேட்டுக்கொண்டார்கள். அதைத் திருவருள் காட்டும் வழியெனவே ஒப்புக்கொண்டிருக்கிறேன். ஆனால் அதை ஒரே மொத்தமாகப் புத்தக வுருவில் முடிப்ப தென்றால் மிகுந்த பொருட் செலவு ஏற்படுமாதலால் மாதம் ஒன்றுக்கு 64 பக்கங்கொண்ட இதழ்களாக வெளி யிடலாமென்று தீர்மானித்திருக்கிறேன். தாள் விலை மிகுதியாய்விட்டபடியால் ஆண்டு இதழ்கள் 12க்கு ஆறு ரூபா விழுக்காடு 500 கையொப்பம் வாங்கி அனுப்புவதாய் அன்பர் சிலர் வாக்களித்திருக்கின்றார்கள். இதற்குக் கையொப்பக்காரராகச் சேர விரும்பும் அன்பர்கள் மேற்படி ஆறு ரூபாவும் முன்பணமாக அனுப்பி வைத்தல் வேண்டும்.''

இவ் அறிக்கையின்படி யாது காரணத்தாலோ பெரிய புராண விரிவுரை அச்சிட்டு வெளிவராமற் போயிற்று.

திருவரங்கனார் கொழும்பினின்றும் சென்னைக்கு 1919இல் வந்து 'திருசங்கர் கம்பெனி' என்ற பதிப்பகத்தைத் தொடங் கியபின் 1920இல் மறைமலையடிகளாரைக் கொண்டு திருவாச கத்துக்கு விரிவுரை எழுதச் செய்து வெளியிடத் திட்டம் வகுத்தார்கள். அதன்படி 'செந்தமிழ்க் களஞ்சியம்' என்ற தலைப்பில் திருவாசக விரிவுரை நான்கு அகவல்களுக்கு மட்டும் எழுதப்பெற்று 12 பகுதிகளாக வெளியிடப்பெற்றது. அதோடு திருவாசக விரிவுரை முற்றுப் பெறாமல் நின்றுவிட்டது. முதற்கண் கொழும்பிலே தீர்மானித்தபடி பெரியபுராண விரிவுரையினை வெளியிட வேண்டுமென்பதும் நிறைவேறாமற் போயிற்று. இதுவே திருவரங்கனார்க்கு ஏற்பட்ட முதல் ஏமாற்றமாகும்.

அவர்கள் தணிகைப்புராண உரையினை வெளியிட வேண்டுமென்று கருதியதும் தமது காலத்திலே நிறைவேற வில்லை. அவர்கள் 1944ஆம் ஆண்டில் இறையடி சேர்வதற்கு முந்தின ஆண்டில் சோழவந்தான் தமிழ்ப் பெரும் புலவர் கந்தசாமியார் எழுதி வைத்திருந்த தணிகைப்புராண உரைப் படியினைப் பெறுவதற்குச் சோழவந்தான், கூமாப்பட்டு முதலான ஊர்கட்குச் சென்று முயன்றும் கிடைக்கப் பெறாமல் அலைக்கழிக்கப்பெற்று மிகவும் சோர்வடைந்து திரும்பினார்கள்.

1956இல் தமியேன் திரு. கந்தசாமியாருடைய உறவினரும் மேலூர் மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளித் தலைமை யாசிரியருமான திருவாளர் சதாசிவத் தேவரவர்கள் வழித் தணிகைப்புராண உரை கையெழுத்துப்படியினை விலை கொடுத்து உரிமை பெற்றேன். தணிகைப்புராணம் 3161 பாட்டுக்களில் திரு. கந்தசாமியார் அவர்கள் 1976 பாட்டு கட்கே உரை எழுதியிருந்தனர். எஞ்சிய 1185 பாட்டுக்களில் கழகப் புலவர் செல்லூர்கிழார் இராமசாமி பிள்ளை 114 பாட்டு கட்கும் பெருமழைப் புலவர் சோமசுந்தரனார் 1071 பாட்டு கட்கும் உரை எழுதி முடித்தனர். 1965ஆம் ஆண்டில் தணிகைப்புராண உரையினை இரண்டு பகுதிகளாகக் கழக வழி வெளியிட்டு என் தமையனார் தம் சீரிய கருத்தும் முயற்சியும் வெற்றிபெறச் செய்து மகிழ்வுற்றேன்.

இனித் திருவாளர் அ. மு. சரவண முதலியாரவர்கள் தம் வாழ்க்கையில் ஏற்பட்ட பெருந்திருப்பம் பற்றி அறிவோம்.

அதுகாறும் தமிழுலகு திரு. சரவண முதலியாரவர்களின் புலமை நலத்தை அறியாதிருந்தது. திருவிளையாடற் புராணத் துக்குப் பதவுரை எழுதி முடித்த அதே ஆண்டில் பலவான்குடி 'சிவநேசன்' இதழ் உதவி யாசிரியராக இரு திங்கள்வரை பணிபுரிந்து விலகிப் பின் கீழைச்சிவற்பட்டி மீனாட்சிசுந்தரேசர் கலாசாலைத் தலைமை யாசிரியர் பணியினை ஏற்றார்கள். என் தமையனார் திருவரங்கனாரவர்கள் நெல்லையில் ஒருகலாசாலையில் திரு. முதலியாரவர்களைத் தமிழாசிரியராக அமர்த்துவதற்கு முயன்றுள்ள செய்தி திரு. அ. மு. ச. அவர்கள் 18—10—1927இல் எழுதிய கடிதத்திலிருந்து தெரிய வருகிறது.

> "இன்று இவ்வூ (லாலுகுடி) ருக்கு இறைவனை வணங்கும் பொருட்டு உயர்திரு. மறைமலையடிகளாருடன் வந்திருக்கிறேன்.
>
> தாங்கள் கருதி எழுதிய வண்ணமே அடிகளிடத்தும் திரு. நாட்டாரையா அவர்களிடத்தும் தகுதிச் சீட்டு வாங்கிச் சேர்த்துக் கலாசாலை மானேசருக்கு இன்று மனுச் செய்திருக்கிறேன்."

கீழைச்சிவற்பட்டி மீனாட்சி சுந்தரேசர் கலாசாலைத் தலைமையாசிரியராகப் பணியாற்றியபின் திரு. முதலியாரவர்கள் 1930ஆம் ஆண்டில் லாலுகுடியில் மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளியில் அப்போது திருச்சி மாவட்டக் கழகத் தலைவரா

யிருந்த திவான்பகதூர் தி. மு. நாராயணசாமி பிள்ளையவர்களால் தற்காலிகத் தமிழாசிரியராக அமர்த்தப் பெற்றார்கள். அதன்பின் சிதம்பரத்தில் மீனாட்சி புலவர் பயிற்சிக் கல்லூரியிற் பயின்று தேர்ச்சி பெறவும் நிலையாகவே தமிழாசிரியரானார்கள். பின்னர் 1943 ஆம் ஆண்டில் ஓய்வு பெறும்வரை அரியலூர் உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக விருந்தார்கள். அப்போது அரியலூரில் இன்றுவரை சிறப்பாக நடைபெற்று வரும் 'மணிவாசக மன்ற'த்தை நிறுவித் திறந்து வைத்தார்கள்.

திரு. முதலியாரவர்கள் இத் தமிழ்நாட்டிலும் கடல் கடந்து சென்று இலங்கை, மலேயா நாடுகளிலும் சொற்பொழிவாற்றிப் பெரும்புகழ் பெற்றார்கள். இவர்களை அழைத்துச் சொற்பொழிவுகளாற்றச்செய்து பயன்பெறாத அவைகளோ, மன்றங்களோ, திருமடங்களோ, பள்ளி, கல்லூரி, திருக்கோயில்கள் எவையுமோ நம் நாட்டில் இல்லை என்று சொன்னால் மிகையாகாது. பெரியபுராணத்தை எழுத்து எண்ணிக் கற்றவர்கள் என்று போற்றப் பெற்றனர். திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையில் பெரியபுராணச் சொற்பொழிவுகளைத் தொடர்பாக நடத்தி, நிறைவு விழாவில் பெரும் பேராசிரியர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமையில் 'பெருஞ் சொல் விளக்கனார்' என்ற பட்டம் வழங்கப் பெற்றுப் பீடும் பெருமையும் அடைந்தார்கள். கழக அமைச்சர் திருவரங்கனார் நெல்லைக்குத் திரு. முதலியாரவர்களை வரவழைத்துப் பெரியபுராணம்பற்றித் தொடர்பாகச் சொற்பொழிவுகளாற்றச்செய்து பெரும்பொருள் தொகுத்துக் கொடுத்துவந்தார்கள்.

1944 மார்ச்சுத் திங்கள் இறுதியில் தமியேன் திரு. முதலியாரவர்களைச் சென்னைக்கு வரவழைத்து என் வீட்டிலேயே தங்கச்செய்து விருந்தளித்துப் பெரியபுராணச் சொற்பொழிவுகளைத் தொடர்பாகப் பள்ளிகள், கல்லூரிகள், திருக்கோயில்களிலே ஆற்றச் செய்து பொருள் தொகுத்துக் கொடுத்தேன். அச்சொற்பொழிவுகட் கெல்லாம் டாக்டர் மு. வரதராசனாரவர்கள் வந்திருந்து கேட்டு மகிழ்வுற்றார்கள்.

அப்போது என் மாமனாரவர்கள் சென்னையிலும், திரு. முதலியாரவர்களின் அன்புக்கும் மதிப்புக்குமுரிய பண்டித நாவலர் வேங்கடசாமி நாட்டாரவர்கள் தஞ்சையிலும் இறைவன்றிருவடி நீழலடைந்தார்கள். அடுத்து மூன்று கிழமைகளில் அதாவது 28-4-1944 இல் கழகத்தை நிறுவி நிலை

பெறுத்திய என் தமையனுர் திருவரங்கனுரவர்கள் திடுமென இறையடி சேர்ந்தார்கள்.

திரு. நாட்டாரையா அவர்களின் அரவணைப்பினுல் திருவிளையாடற் புராணத்துக்குப் பதவுரை எழுதியபின் அங்கயற் கண்ணியோடமர்ந்த ஆலவாய்ப் பெருமானருளால் திரு. முதலியாரவர்கள் வாழ்க்கையில் பெரும் புகழ் ஏற்படும் வகையில் ஒரு திருப்பம் ஏற்பட்டுள்ள தென்பது கண்டு மகிழ்வோம்.

இனி அவ்வாறே திரு. முதலியாரவர்களின் ஒரே திருமகனுர் பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் எம்.ஏ.அவர்கள் வாழ்க்கையிலும் முன்னேற்றத் திருப்பம் ஏற்பட்ட செய்தி இங்கே குறிப்பது பொருத்தமாகும்.

திருவாளர் நாவலர் நாட்டாரையா அவர்களின் ஒரே மகனுர் திரு. நடராசனுரும், திரு. முதலியாரவர்களின் மகனுர் திரு. ஞானசம்பந்தமும் 1933ஆம் ஆண்டில் பள்ளி இறுதித் தேர்வு எழுதியுள்ளார்கள். இருவர் தேர்வு எண்களையும் திரு நாட்டாரையா அவர்கள் எனக்குத் தெரிவித்து முடிவினை முன்னதாக அறிந்து எழுதுமாறு எழுதிய அட்டைக் கடிதங்களின் செய்திகள் வருமாறு: 12-5-1933 கடிதத்தில் நம் நடராசன் செய்தி தெரிந்து எழுதவும். 14941. எல்லாவற்றிற்குங் கடிதம் எழுதவும். 19-5-1933 கடிதத்தில் நடராசன் செய்தியைத் திரு. ஆறுமுக முதலியார் பார்த்து எழுதியுள்ளார். நலமாகவிருக்கிறது. நீங்கள் பார்த்திருப்பினும் தெரிவிக்க. திரு. அ. மு. ச. அவர்களின் புதல்வன் சம்பந்தம் எண் 14801 ஆகும். இதன் விபரத்தை உடன் பார்த்து எனக்குத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

14801 எண் பக்கம் 'Fail' என்று என் கைப்பட எழுதியுள்ளேன்.

இந்த இரு கடிதங்களை இப்போது எடுத்துப் பார்த்த போது எனக்கு வியப்பை அளித்தது. Fail என்று போட்டது உண்மைதானு என்பதை அறியும்பொருட்டுத் திரு. நாட்டாரையா அவர்களின் மகனுர் திரு. வே. நடராசனுர், B. Sc. (Hons) அவர்களைக் கண்டு கேட்டேன்.

''தேர்ச்சி பெருதது உண்மைதான். யான் திருச்சி பிஷப் ஷீபர் கல்லூரிப் பள்ளியில் பயின்றேன். திரு. சம்பந்தம் லாலுகுடிப் பள்ளியில் பயின்ருர். 1932ஆம் ஆண்டில் இருவரும் தேர்வில் தோற்ருேம். 1933இல் யான் தேர்ச்சி

யுற்றேன். திரு. சம்பந்தம் தேர்ச்சி பெறவில்லை. யான் அந்த ஆண்டில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் இடைநிலை வகுப்பிற் சேர்ந்து படித்தேன். திரு சம்பந்தம் மறு ஆண்டிலும் தோல்வி யுற்றமையால் 1935 ஆம் ஆண்டில் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலே இடைநிலை வகுப்பிற் சேர்ந்து படித்தார். அவ்வாண்டில் யான் பி. எஸ்ஸி., ஆனர்சு முதலாண்டிற் படித்துக் கொண்டிருந்தேன். திரு. சம்பந்தமிடம் கணக்கு அறிவியல் பாடங்களை எடுத்துப் படிக்குமாறு சொல்லி யான் இரவிலே அவருக்குப் பயிற்சியளித்து வந்தேன். அவ்வாண்டில் திரு. சம்பந்தமுடன் பயின்றவர்கள் தமிழகவரசு கல்வித்துறைச் செயலர் திரு. கா. திரவியம், I.A.S., அவர்களும், மலேயா முன்னுள் அமைச்சர் சம்பந்தம் அவர்களுமாவார்கள். திரு. சம்பந்தம் இடைநிலைத் தேர்வில் வெற்றி பெற்றபின் ஆனர்சு வகுப்பில் தமிழைப் பாடமொழியாக ஏற்றுக் கொண்டார்'' என்று அவர்கள் கூறியது மிக்க வியப்பையும் மகிழ்ச்சியையும் தந்தன. திரு. நடராசனுரும், திரு. சம்பந்தரும் பிசிராந்தையாரும் கோப்பெருஞ்சோழரும் போன்று உயிரனைய நண்பர்களாவர். வாழ்க்கையில் அடுத்தடுத்து ஏற்படும் தோல்விகளைக் கண்டு சோர்வடையாமலும் அஞ்சாமலும் முயல்பவர்கள் பின்வாழ்க்கையில் பெரிய முன்னேற்றமும் வெற்றியும் அடைவார்கள் என்பதைக் கருதியே இதனை வெளியிடுகின்றேன்.

திரு. சம்பந்தனுர் இளமையிலே சுறுசுறுப்பும் துடிப்பும் உடையவர். அவர் அவையில் பேசுவதைக் கேட்டு மகிழ்ச்சி யுற்ற எனக்கு அவர் பள்ளியிறுதித் தேர்வில் மூன்றுமுறை தோல்வி யுற்றது எங்ஙனம் வியப்பை விளைவிக்காதிருக்கும்!

அவரிடம் எனக்கு மிக்க மதிப்பும் அன்பும் உண்டு. அவரியற்றிய 'இலக்கியக் கலை' என்ற ஆராய்ச்சி நூலைக் கழக வழி வெளியிட்டு வருவதிற் பெருமகிழ்ச்சி யடைகின்றேன். இப்போது அவர்கள் மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்திருப்பது பேருவகை தருகின்றது. நீடு வாழ்கவென அவரை வாழ்த்துகின்றேன்.

அடுத்த இதழில் திருப்புகழ், கல்லாடம் ஆகிய பதிப்புக் களைப் பற்றிய குறிப்புக்கள் வெளியிடப்பெறும்.

வ. சு.

———

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

துல்[1] (பொருந்தற் கருத்து வேர்ச்சொல்)—தொடர்ச்சி

தொள் — தொழு — தோழன் = கூட்டாளி, நண்பன். தோழம்—தோழமை = உடன்கூட்டு நட்பு.

தொழு — தொடு — தொட்ட = பெரிய. க. தொட்ட. தொடு—தோடு = 1. திரட்சி. 2. திண்ணமான இலையாகிய ஓலை. "வண்டோட்டுத் தெங்கின்" (பெரும்பாண். 353). 3. ஓலைச்சுருள். 4. காதணி. "வெளிவெண்டோட்டு" (மணி. 3 : 118). 5. விளாம்பழத்தின் ஓடு. "விட்டதடா ஆசை விளாம்பழத் தோட்டோடே." (பழமொழி). 6. தொகுதி. "தோடுகொள் வேலின் தோற்றம் போல" (புறம். 35).

தோடு—தோட்டம் = வளர்ப்புச் செடிகளின் தொகுதி. ம. தோட்டம். தெ., க., து. தோட்ட.

தோள்—தோய். தோய்தல் = 1. படுதல். "கால்நிலந் தோயாக் கடவுளை" (நாலடி. கட. வாழ்.). 2. தொடுதல். "விண்டோயு மிளைகடந்து" (பு. வெ. 6 : 16). 3. செறிதல். 4. கலத்தல். "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது" (கம்பரா. சரபங். 27). 5. அணைதல். "நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர்" (குறள். 917). 6. பொருந்துதல். "தாடோய் தடக்கை" (புறம். 14). 7. உறைதல். "தோயும் வெண் டயிர்" (கம்பரா. நாட்டுப். 28). 8. ஒத்தல். "விசும்புதோ யுள்ளமொடு" (மலைபடு. 558). 9. நட்டல். "தோய்ந்தாருட் டோய்ந்தா ரெனப்படுதல்" (திரிகடு. 81).

துறு—தொறு = 1. கூட்டம். "படைப்பெருந் தொறு வொடும் படர்ந்து" (கந்தபு. யுத்த. முதனட். 15). 2. ஆமந்தை. "தொகைமலி தொறுவையாளுந் தோன்றல்" (சீவக. 474). 3 தொழு. 4. இடைக்குலம். "நலத்தகு தொறுவினுள்ளேன்" (சீவக. 477).

தொறு—தொறுவு. தொறு—தொறுவன் = இடையன்.

தொறு = உம்மீறு பெற்றுப் பொருளிடங் காலம் ஒவ் வொன்றும் என்னும் பொருள்படவரும் இடைச்சொல்.

"நவில்தொறும் நூல்நயம் போலும்" (குறள். 783).

தொறு—தோறு. "காண்டோறும் பேசுந்தோறும்" (திருவாச. 10 : 3).

தொறு—தொற்று. தொற்றுதல்=1. கை கால்களாற் பற்றுதல். 2. பற்றியேறுதல் அல்லது படர்தல். "புரைதீர் தவந்தொற்று கொள்கொம்பெனுந் தெய்வமுனி" (உபதேச. சிவபுண்ணிய. 93). 3. ஒட்டிக் கொள்ளுதல். தொற்று நோய்=ஒட்டிக் கொள்ளும் நோய்.

தொற்று — தொத்து. தொத்துதல் = 1. பற்றுதல். "கோற்றொத்து கூனனும்" (பதினெ. திருத்தொண். 48). 2. ஒட்டுதல். "உடுமீன் தொத்தப் புலி கனகக்கிரி வெயில் சுற்றிய தொத்தான்" (கம்பரா. பிரமாத். 117). 3. பற்றி யேறுதல். "நரருமினித் தொத்துவர்" (திருவாலவா. 29 : 1). தொற்றுநோய்—தொத்துநோய்.

தொத்து=1. பற்று. "சித்தந் தொத்தற" (ஞானவா. சுரகு. 23). 2. தொடர்பு. "தொத்தற விட்டிட" (திருமந். 2245). 3. திரள். "தொத்தொளி முத்துத் தாமம்" (சீவக. 2653). 4. பூ இலைகாய் முதலியவற்றின் கொத்து. "தொத்தீன் மலர்ப் பொழிற்றில்லை" (திருக்கோ. 121). 5. அடிமை. 6. வைப்பாட்டி.

தொத்து—தொத்தன்=அடிமையாள்.

தொத்துவான்=தொத்துநோய்.

தொத்துக் குட்டி=1. உடன்பற்றித் திரிபவன். 2. குரங்குக் குட்டிபோல் தாயைப் பற்றிக் கொண்டிருக்கும் குட்டி அல்லது பிள்ளை.

தொத்து—தொத்தாய்=சிறிய தாய். (சென்னை வழக்கு).

தொத்து — தொத்தை — தத்தை=இலையைப் பற்றிக் கொண்டு தொங்கும் கிளி. இ. தோத்தா.

தொத்து — தொந்து — தொந்தம் = 1. தொடர்பு. "தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்" (தேவா. 4 : 4). 2. உறவு, உறவாடல். 3. தொடுப்பு. 4. புணர்ச்சி. 5. இரட்டை. வ. த்வந்த்வ.

துறு—துற்று. துற்றுதல்=நெருங்குதல். "மைம்மரு பூங்குழற் கற்றை துற்ற" (தேவா. 83 : 1). க. துத்து.

துற்று = கூட்டம் (பிங்.). தெ. துத்த.

துற்று—துத்து—துது—துதை. துதைதல் = 1. செறிதல். "தோடமை முழவின் துதைகுர லாக" (அகம். 82). 2. மிகுதல்.

துதை—ததை. ததைதல் = நெருங்குதல். "ததையிலை வாழை" (ஐங். 460).

துது—தொது—தொதி = பப்பரப்புளி.

தொது—தோது = 1. தொடர்பு. அதற்கும் இதற்கும் என்ன தோது? (உ. வ.). 2. பொருத்தம். மாப்பிள்ளைக்கும் பெண்ணிற்கும் தோதில்லை. (உ. வ.). 3. ஒப்பு. அவனுக்குத் தோது எவனுமில்லை. (உ. வ.). தெ., க. தோது.

தும்—திம்—திம்மை = 1. பருமன். 2. கண்டை (சரிகை) முதலியவற்றின் பந்து.

திம்—திம்மன் = 1. தடித்தவன். 2. ஆண் குரங்கு.

க. திம்ம., தெ. திம்மடு.

திம்மலி = தடித்தவள் (யாழ்.). திம்மலி—திமிலி.

திமி = பெருமீன். (திவா.). வ. திமி.

திமி—திமிசு = தளத்தைக் கெட்டியாக்குங் கட்டை. தெ. திமிச.

திமிதம் = 1. பேரொலி. 2. உறுதி (யாழ். அக.).

திமிர் = 1. மரத்துப்போகை. 2. உணர்ச்சியறும் நோய். 3. மனக் கொழுப்பு.

ம. திமிர். தெ. திமிரி.

திமில் = 1. திரண்ட எருதின் முரிப்பு. 2. திண்ணிய மீன் படகு.

"திண்டிமில் வன்பரதவர்"　　(புறம். 24).

திமில்—திமிலம் = 1. பேரொலி. "திமில நான் மறைசேர் திருப்பெருந் துறையில்" (திருவாச. 29 : 4). 2. பெருமீன் வகை. (பிங்.).

திமுதிமு வெனல்=மக்கள் திரளாக வந்து கூடுதற் குறிப்பு.

திமுக்குத் திமுக்கெனல்=தடித்த ஆள், சிறப்பாகப் பெண், நடந்து போதற் குறிப்பு.

துல் — தில் — திர் — திரள். திரளுதல்=1. கூடுதல். மக்கள் திரளுகிறார்கள். (உ. வ.). 2. மிகுதல். "அவலு மிசையு நீர்த்திரள் பீண்டி" (மதுரைக். 240). 3. இறுகுதல். பால் திரண்டுவிட்டது. 4. பருத்தல். "தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி" (நாலடி. 199). 5. வீங்குதல்.

ம. திரளுக.

திரள=முழுதும். "திரள ஒப்பில்லையாகில் ஒருவகை யாலேதான் ஒப்புண்டோ" (ஈடு, 1 : 1 : 2).

திரளை=1. கூட்டம். 2. கட்டி. "சோறுவெண்டயிரினுற் றிரளை மிடற்றிடை நெருக்குவார்" (திவ். பெரியதி. 2 : 1 : 7). 3. நூலுருண்டை.

திரளை—திரணை=1. திண்ணை. 2. எழுதக வேலை. 3. வைக்கோற்புரிக் கற்றை. 4. மாலைவகை. "ஒட்டிய திரணை யோடு" (சிலப். 22 : 43). 5. உருண்டை.

திரட்சி=1. கூட்டம். "திரட்சி விரும்பக் கையிலே பாத்திரத்தை யிருத்திய" (பு. வெ. 3 : 5, உரை). 2. உருண்டை வடிவம். 3. முத்து.

திரட்டு=தொகுப்பு. எ-டு: பட்டினத்தார் பாடற் றிரட்டு.

திரள்—திரடு=மேடு (நெல்லை வழக்கு).

திரம்=1. உரம். 2. வலிமை. 3. உறுதி. 4. நிலை பேறு. "உலகைத் திரமென வுட்கொண்டு" (தாயு. பராபர. 274). 5. மலை. 6. பேரின்ப வீடு. 7. ஒரு தொழிற் பெயரீறு. திரம்—வ. ஸ்திர.

திரம்—திறம்=1. உறுதி. 2. வலிமை. 3. நிலைபேறு. 4. கற்பு. "தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்" (சிலப். மங்கல. 27). 5. சமர்த்து. 'உன் திறத்தைக் காட்டு, பார்க்கலாம்." (உ. வ.); 6. கூட்டம். 7. ஆடு மாடு எருமை

எவ்வெண்பது கூடின கூட்டம். 8. மிகுதி. 9. இயல்பு. "ஒருதனி நின்ருய் உன்திறம் அறிந்தேன்" (மணி. 4:96). 10. வகை. 11. கூறுபாடு. "நிற்றிறஞ் சிறக்க" (புறம் 6). 12. சார்பு. 13. கிளைப் பண். "குறைந்த நரம்பு திறமெனக் கொள்க" (பிங். 6 : 325). 14. செயல். "தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று காய்த்திய" (சிலப். 21: 54). 15. கோலம். "தவத்திறம் பூண்டு தருமங் கேட்டு" (மணி. பதி. 93). 16. கொள்கை. "சமயக் கணக்கர் தந்திறங் கேட்டதும்" (மணி. பதி. 88). 17. இடையாட்டம் (விஷயம்). "பதைக் கின்ற மாதின் திறத்து" (திவ். இயற். திருவிருத். 34). 18. செய்தி. "அத்திறங் கேட்ட" (காஞ்சிப்பு. வாணீச. 27). 19. ஆம்புடை (உபாயம்). "உய்திற மில்லை" (கம்பரா. திருவவ. 18). 20. திருவம் (பாக்கியம்). "திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை" (கம்பரா. திருவவ. 104). 21. பக்கம் 22. படித்தரம்.

திறம்—திறன் =1. உறுதி. 2. கூறுபாடு. "திறனறிந் தேதிலா ரிற்கட் குருடனுய்" (நாலடி, 158). 3. பக்கம். "பெண்ணுரு வொருதிற னுகின்று" (புறம். 1).

க. தெற.

திறன்—திறல் =1. வலிமை. "துன்னருந் திறல்" (புறம். 3 : 8). 2. திடாரிக்கம். 3. வெற்றி. "திறல் வேந்தன் புகழ்" (பு. வெ. 9 : 31, கொளு). 4. ஒளி. திறல் விடு திரு மணி யிலங்கு மார்பின்" (பதிற்றுப். 46 : 3).

திறம்—திறவு =1. உறுதி. "திறவதிற் றீர்ந்த பொருள்" (திரிகடு. 72). 2. செவ்வை. "திறவதி னுடி" (தொல். பொ. 521). 3. தகுதி. 4. ஆம்புடை.

திறக்க = திறமையாக (நாஞ். வ.).

திறவு—(திறகு)—திறக்கு = கருமம். "அவன் திறக்கிலே போகப் படாது" (யாழ்.).

தில்—(திர்)—திரு =1. திரண்ட செல்வம், செல்வம். (ஒ. நோ : வெறு—வெறுக்கை = செல்வம். வெறுத்தல் செறிதல்). "சீறிற் சிறுகுந் திரு" (குறள். 568). 2. திருவம் (பாக்கியம்). "நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்" (குறள். 1072). 3. சிறப்பு. 4. அழகு. "ஒளிகெழு திருமுகம்" (மதுரைக். 448). 5. பொலிவு. (திருக்கோ. 114). 6. காந்தி. "திரு என்று

காந்தி'' (ஈடு, 3 : 5 : 10). 7. நல்வினை. ''சேர்ந்தெழு நங்கைமாரே திருநங்கைமார்கள்'' (சீவக. 2552). 8. தாலி. ''திருவொன்றுட்படப் பட்டைக் காறை'' (S. I. I. ii, 157). 9. ஒருவகைத் தலையணி. ''செந்திருவிற் கேற்கத் திருவும் பிறையுமிட்டு'' (கூளப்ப. 140). 10. கணியன். திரு ஒருவனுக்கும் கீழாள் இரண்டுக்கும் (S. I. I. ii, 294). 11. தெய்வத் தன்மை. திருச்சிற்றம்பலம், திருமூலர், திருமந்திரம், திருப்பணி. 12. திருமகள். ''நினைப்பானை நீங்குந் திரு'' (குறள். 519). 13. மகளிர் கொங்கைமேல் தங்குவதாகக் கருதப்படும் வீற்றுத் தெய்வம். ம., தெ., க. திரு. வ. ச்ரீ (ஸ்ரீ).

திருவன் = 1. செல்வன். 2. திருமால். ''சிங்கமாய்க் கீண்ட திருவன்'' (திவ். இயற். 2 : 84).

திருவாளன் = 1. செல்வன். 2. ஒரு மதிப்படைச் சொல். எ - டு: திருவாளர் மாணிக்கவேல் செட்டியார் (காசிமேடு, சென்னை). 3. திருமால். ''ஒலி திரை நீர்ப் பௌவங் கொண்ட திருவாளன்'' (திவ். பெரியதி. 5 : 5 : 1).

திருமகன்—திருமான்—வ. ஸ்ரீமான்—சீமான்

தில்—திள்—திண்—திண்மை = 1. பருமன். 2. வலிமை. ''சால்பென்னுந் திண்மையுண் டாகப் பெறின்'' (குறள். 988). 3. செறிவு. ''மண்ணிற் றிண்மை வைத்தோன்'' (திருவாச. 3 : 26). 4. உறுதி. 5. உண்மை. 6. கலங்கா நிலைமை. ''கற்பென்னுந் திண்மையுண் டாகப் பெறின்'' (குறள். 54).

திண்—திண்ணம் = 1. வலிமை. 2. இறுக்கம். ''திண்ண மாத்தொளிர் செவ்விள நீர்'' (கம்பரா. எழுச்சி. 50). 3. தேற்றம். ''பரகதி திண்ண நண்ணுவர்'' (தேவா. 1111 : 10).

திண்ணன் = வலியன். ''உரிமைப் பேருந் திண்ணனென் றியம்பு மென்ன'' (பெரியபு. கண்ண. 17).

திண்ணிமை = மனவுறுதி. ''திண்ணிமையோடு மெல்லச் சார்ந்தநின்'' (திருவாலவா. 29 : 17).

திண்ணியன் = 1. வலியவன். 2. மனவுறுதியுள்ளவன். ''திண்ணியராகப் பெறின்'' (குறள். 666).

திண்—திண்ணகம் = 1. செம்மறி யாட்டுக் கடா. 2. தட்டார் மெருகிடுங் கருவி வகை. ''திண்ணகத்தாற் செய்யுந் தொழில்களை வல்ல பணித்தட்டார்'' (சிலப். 6 : 136, உரை).

திண்ணகம் — திண்ணக்கம் = நெஞ்சுரம், நெஞ்சழுத்தம். திண் — திண்ணை = 1. மேடு. "தேனயாம் பூம்பொழிற் றிண்ணை" (சீவக. 1822). 2. வீட்டுத் திரணை. "ஆய்மணிப் பவளத் திண்ணை" (சீவக. 1126).

திண் — திண்ணம் — திணம் = வலிமை. "திணமணி மாடத் திருவிடைக் கழியில்" (திருவிசை. சேந். திருவிடை. 5).

திணம் — திணர். திணர்த்தல் = செறிதல். "வண்டு திணர்த்த வயல்" (திவ். திருப்பள்ளி. தனியன்). 2. கனமாகப் படிந்திருத்தல். "திணர்த்த வண்டல்கண்மேல்" (திவ். திருவாய். 6 : 1 : 5).

திண் — திணி. திணிதல் = 1. செறிதல். "மண்டிணிந்த நிலனும்" (புறம். 2). 2. இறுகுதல்.

திணித்தல் = 1. செறிய உட்புகுத்துதல். "சோற்றினை வாங்கிப் புல்லைத் திணிமினே" (திவ். பெரியாழ். 4 : 4 : 5). 2. பதித்தல். "பொன்றிணி மணிமான" (கம்பரா. வனம்பு. 3)

திணி — திணிகம் = செறிந்து நின்று பொரும் போர்.

திணி — திணிம்பு = செறிவு. "இருளின் கருந்திணிம்பை" (திவ். இயற். திருவிருத். 72).

திணியன் = பயனற்ற தடியன்.

திண் — திணுகு — திணுங்கு. திணுங்குதல் = 1. செறிதல். "திணுங்கினவிருள்" (திவ். திருவாய். 2 : 1 : 7 : பன்னீ.). 2. உறைதல். "நெய்திணுங் கினுற்போல" (திவ். திருமாலை. 2, வியா. பக். 15).

திணுங்கு — திணுக்கம் = 1. செறிவு. 2. கட்டி.

திண் — (திண்ணை) — திணை = 1. கூட்டம். 2. வகுப்பு. 3. இலக்கணப் பொருள் வகுப்பு. உயர்திணை, அஃறிணை. "ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே" (தொல். சொல். 1). 4. அகப்பொருளிலக்கண ஐந்நிலப் பகுப்புள் ஒன்று. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை. 5. ஐந்நில மக்கள் காதலொழுக்கம். 6. அகப்பொருளின் எழுவகுப்புள் ஒன்று. கைக்கிளை, அன்பின் ஐந்திணை, பெருந்திணை. 7. புறப்பொருளின் எழு வகுப்புள் ஒன்று. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்.

திண்—திண்பு=1. செறிவு. 2. இறுக்கம். 3. வலிமை. 4. உறுதி. க. திண்பு.

திண்பு—திட்பு=1. செறிவு. 2. இறுக்கம். 3. வலிமை. 4. உறுதி.

திட்பு—திட்பம்=1. செறிவு. 2. சொற்பொருள்களின் உறுதி. "திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்" (நன். 18). 3. வலிமை. "உருத்திட்ப முருக்காலை" (காஞ்சிப்பு. திருநாட். 97). 4. மனவுறுதி. "வினைத்திட்ப மென்ப தொருவன்" (குறள். 661). 5. தேற்றம்.

திண்—திண்டு=1. பருமன். 2. சிறுமேடை. 3. அரைவட்டமான பஞ்சணை. "திண்டருகு போட்டான்" (விறலிவிடு. 476). ம. திண்டு, தெ. திண்டு (d).

திண்டு—திண்டி=1. பருமன். "திண்டி வயிற்றுச் சிறுகட் பூதம்" (தேவா. 1225 : 7). 2. தடித்தவள். 3. யானை. 4. அரசமரம்.

திண்டு—திட்டு=1. மேட்டுநிலம். 2. மண் வெட்டிய இடத்தில் வெட்டாது விடப்பட்ட சிறு துண்டு. 3. ஆற்றிடைக் குறை. "புளினத் திட்டிற் கண்ணகன் வாரிக் கடல் பூத்த" (கம்பரா. வானர. 8). 4. யானைகளைப் பிரித்து வைப்பதற்காகக் கட்டப்பட்ட இடைச் சுவர். 5. சிறு குன்று. 6. நூறு குதிரை காலாள் முதலியன கொண்ட படைத் தொகைப் பிரிவு. எ-டு: ஒரு திட்டுக் குதிரை.

ம., க. திட்டு. திட்டு—திட்டாணி=மரத்தைச் சுற்றிய மேடை. "சத்திரச் சாலையு மொத்த திட்டாணியும்" (இராமநா. சுந். 4).

திட்டு—திட்டம்=1. நிலைபேறு. "மயிலைக்கட் டிட்டங் கொண்டார்" (தேவா. 1118 : 1). 2. தேற்றம் (நிச்சயம்). "திட்டமாப் பரகதி சேர வேண்டிடில்" (செவ்வந்திப்பு. பிரமதேவ. 25). 3. உறுதியான ஏற்பாடு. "அவர் தந் திராணிக்குத் தக்க திட்டஞ் செய்வதுவும்" (பணவிடு. 26). 4. ஒரு வினையைச் செய்யும் வழிவகுப்பு. 5. ஒரு வினைக்குரிய வரவு செலவுக் கணக்கு. திட்டவட்டம்=முழுத் தேற்றமான வரையறை.

திட்டு—திட்டை=1. திண்ணை. (திவா.). 2. மேட்டு நிலம். ''மணற்றிட்டை சேர்ந்தான்'' (சீவக. 514). 3. உரல் (பிங்). ம. திட்ட.

திட்டம்—திடம்=1. உறுதி. ''இன்றைக் கிருந்தாரை நாளைக்கிருப்பரென் றெண்ணவோ திடமில்லை'' (தாயு). 2. வலிமை. ''தாண்டுபரி தூண்டு திடசாலி'' (தனிப்பா.). 3. தேற்றம். ''வார்த்தை திடம்படக் கேட்டு'' (தேவா. 171 : 4). 4. திடாரிக்கம். ''பொறைதிட ஞானம்'' (காசிக. தீர்த். 7). 5. நிலை தவருமை. '''திடவிசும் பெரிவெளி'' (திவ். திருவாய். 1 : 1 : 7). 6. உண்மை. ''உயர்கதி பெறுவது திடனே'' (தேவா. 617 : 2).

திடம்—வ. த்ருட. (drdha).

திடம்—திடன்—திடல்=1. மேட்டுநிலம். ''திடலிடைச் செய்த கோயில்'' (தேவா. 893 : 3). 2. பொட்டல் (திறந்த வெளிநிலம்). ''திடலடங்கச் செழுங்கழனி'' (தேவா. 562:3).

திடல்—திடர்=1. மேட்டு நிலம். ''திடர் விளங்கு கரைப் பொன்னி'' (திவ். பெருமாள். 1 : 11). 2. குப்பைமேடு. (பிங்.). 3. சிறு தீவு.

திடர்—திடறு.

திடம்—திடாரி=அஞ்சா மனத்தன்.

திடாரி—திடாரிக்கம்=நெஞ்சுரம், அஞ்சா நெஞ்சம்.

துல்—தெல்—தெறு—தெற்று. தெற்றுதல்=1. செறிதல் ''கற்றவர் தெற்றிவா'' (திவ். பெரியாழ். 1 : 5 : 8). 2. தொடுத்தல். ''ஆய்பூந் தட்டத் தகத்தோடு தெற்றிய தாமம்'' (பெருங். வத்தவ. 7 : 26). 3. பின்னுதல். ''குடம்பை நூல் தெற்றி'' (கல்லா. கணபதி.).

தெற்று—தெற்றி=1. திண்ணை. ''இலங்குவளை மகளிர் தெற்றியாடும்'' (புறம். 53). 2. மாடம். (பிங்.). 3. மேட்டிடம். ''புற்றுந் தெற்றியும் காடும்'' (S. I. I. iii, 410). 4. தெற்றியம்பலம். கோயிலில் மேட்டிடமாக அமைந்த சித்திர கூடம்.

———

# சங்க இலக்கியத்தில் அன்னம்

(Wild Ducks and Wild Geese)

[திரு. பி. எல். சாமி, பி.எஸ்ஸி.,]

சங்க இலக்கியத்தில் அன்னம் என்ற பறவையைப் பற்றிச் சில செய்திகள் வருகின்றன. இந்தச் செய்திகளை ஆராய்ந்து பார்த்தால் அன்னமென்ற பறவை பிற்காலத்து நூல்களில் கூறப்படும் புராணப் பறவையன்று' என்பது தெளிவாகின்றது. அன்னப் பறவை பால் போன்று தூய வெள்ளை நிறமுடையது. நீரிலிருந்து பாலைப்பிரிக்கும் தன்மை யுடையது என்று பிற்கால நூல்கள் கூறும் செய்திகள் வட மொழியிலிருந்து வந்த செய்திகளாகும். சங்க நூல்களில் அன்னப் பறவை தூய வெள்ளை நிறமானது என்று கூறப்படவில்லை. நீரிலிருந்து பாலைப் பிரித்தெடுக்கும் செய்தியும் சொல்லப்படவில்லை. இந்தச் செய்தியை அறிவியற்படி ஆராய்ந்து பார்த்தால் இயற்கைக்கு முரணானது என்பது தெளிவாகின்றது. நீரிலிருந்து பாலைப் பருகும் பறவை இயற்கையில் இல்லை. வட நூல்களில் கூறப்படும் பறவை 'Swan' என்பதாகும். இந்தப் பறவை வெளி நாடுகளிலிருந்து குளிர்காலத்தில் வட நாட்டிற்கு வரும் பறவையாகும். மிகுந்த குளிர்ப் பகுதிகளில் இயற்கையாக வாழ்வது. இந்தப் பறவையை உறைபனி வீழும் இமயமலைப் பகுதிகளில் காண முடியுமே ஒழியத் தமிழ் நாட்டில் காணவே முடியாது. இந்தப் பறவை தூய வெள்ளையானது. இதன் மேல் ஏற்றிய வட மொழிக் கற்பனைச் செய்திகளையே பிற்காலத் தமிழ்நூல்களில் காண்கிறோம். சங்க நூல்களில் அன்னத்தைப்பற்றி வரும் செய்திகள் பெரும்பாலும் இயல்பான உண்மைச் செய்திகளேயாகும். சங்க நூல்களில் கூறப்படும் அன்ன மெனும் பெயர் தாரா, காட்டுவாத்து, கிளுவை, சிறவி என்று தற்காலம் அழைக்கப்படும் பறவைகளைப் பொதுவாகக் குறிப்பிடுவதாகும். இந்தி முதலிய வட மொழிகளிலும் பேச்சு மொழியில் தாரா முதலிய பறவைகளைச் சில அடைமொழிகளுடன் சேர்த்து அன்னம் என்று அழைக்கும் வழக்கு இன்றும் உள்ளது. இந்த மொழிகளிலும் அன்னம் என்ற பெயர் காட்டு வாத்துப் போன்ற பறவைகளுக்குப் பொதுப் பெயராக வழங்குவது கவனிக்கத் தக்கது. இது போன்றே சங்க நூல்களிலும் அன்னம் என்ற பெயர் வாத்துப் போன்ற பறக்கும் பறவைகளுக்குப் பொதுப் பெயராக வழங்கிற்று.

வாத்துப்போன்ற பல பறவை வகைகள் மழைக்காலத்தில் தமிழ் நாட்டில் காணப்படுகின்றன. இந்தப் பறவைகளுக்குப் படகு போன்ற உடலமைப்பு உள்ளது. இவை நீரில் நன்கு நீந்துவன. வானில் நன்ருகப் பறக்கக் கூடியன. இவை களைத் தமிழ்நாட்டில் தாரா என்றும் காட்டு வாத்து என்றும் அழைப்பர். சங்க காலத்தில் அன்ன மென்று அழைக்கப் பட்ட பறவையினமே சிறிது பிற்காலத்தில் தாரா என்றழைக் கப் பட்டதாகத் தெரிகின்றது. திணைமாலை நூற்றைம்பதில் தாரா என்ற பெயர் முதன் முதலாக வருகின்றது.

''மருதோடு காஞ்சி யமர்ந்துயர்ந்த நீழ
லெருதோ டுழல்கின்ருரோதை—குருகோடு
தாரத்தோ ருய்ந்தெடுப்புந் தண்ணங் கழனித்தே''

—திணைமாலை நூற்றைம்பது-139.

தாரா என்ற பெயர் தேவாரத்தில் சில பாடல்களில் வருகின்றது. தேவாரத்தில் தான் முதலில் தாரா என்ற பெயர் பரவலாக வழங்கிற்று. காட்டு வாத்துப் போன்ற பறவைகளே தாரா என்று வழங்கப்பட்டன.

''கூராரல் இரைதேர்ந்து குளமுலவி வயல்வாழும் தாராவே''

—தேவாரம்

தாரா பூசித்ததால் சண்பை நகரம் ''பூந்தராய்'' என்று பெயர் பெற்றதாகக் கூறப்படுவதையும் காணலாம். தஞ்சாவூர் மாவட்டத்தில் தாராவினப் பறவைகள் மிகுதியாகக் குளங் களிலும் பொய்கைகளினும் இருந்திருக்க வேண்டும். மருத நிலத்துக்கு உரிய பறவையாகத் தாரா பிற்கால இலக்கண நூல்களில் கூறப்பட்டது. சங்க நூல்களில் அன்னம் கழி களில் துழவுவதாகவும், கடற்கரை மணலில் இறகுகளைக் கோதுவதாகவும், மழைக் காலத்தில் மிக விரைவாக வானில் பறப்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

''நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்
அடும்பமர் எக்கர் அஞ்சிறை உளரும்
தடவுநிலைப் புன்னைத் தாதணி பெருந்துறை''

—அகம்-320.

தமிழ் நாட்டுக் கடற்கரைக் கழிகளில் துழாவியதாகக் கூறப்படும் அன்னம் 'கழியன்' என்று அழைக்கப்படும் தாரா வினப் பறவைகளே யென்பது தெளிவாகும். கழிகளில் மேய்வ தால் நாட்டு மக்கள் இந்தவகைப் பறவைகளைக் கழியன்

என்றழைப்பது வழக்கம். மார்க்கழியன், செங்கழியன், குறுங் கழியன், வெள்ளைக்கண் கழியன் என்று தாராவினப் பறவை களைத் தமிழ்நாட்டில் பல இடங்களில் அழைக்கின்றனர். கழியன் என்பது களியன் என்றும் வழங்கும். அகநானூற்றுப் பாடலில் கழிகளைத் துழாவுவதாகக் கூறிய செய்தியைக் கழியன் என்று நாட்டு மக்கள் வாயில் வழங்கும் பெயருடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

"துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்கும்
தண்கடல் வளையினு மிலங்கு மிவள்"

—ஐங்குறுநூறு-106

"நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து
வெண்டோ டிரியும் வீததை கானற்
கைதையந் தண்புனற் சேர்ப்பனொடு"

—குறுந்தொகை-304.

"மின்னுச்செய் கருவிய பெயன்மழை தூங்க
விசும்பா டன்னம் பறைநிவந் தாங்குப்"

—குறுந்தொகை-205.

"செல்ப என்ப தாமே செவ்வரி
மயிர்நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்ச்
செந்நெலஞ் செறுவின் அன்னந் துஞ்சும்
பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்னஎன்"

—நற்றிணை-73.

"கார்பயம் பொழிந்த நீர்திகழ் காலை
நுண்ணயிர் பரந்த தண்ணயம் மருங்கில்
நிறைபறை அன்னத்து அன்ன விரைபரிப்
புல்லுளைக் கலிமா மெல்லிதிற் கொளீஇய"

—அகம்-234.

"கழங்குறழ் ஆலியொடு கதழுறை சிதறிப்
பெயலொடு டங் கின்றால் வானம் வானின்
வயங்குசிறை அன்னத்து நிரைபறை கடுப்ப
நால்குடன் பூண்ட கானவில் புரவிக்
கொடுஞ்சி நெடுந்தேர் கடும்பரி தவிராது
இனமயில் அகவுங் கார்கொள் வியன்புனத்து"

—அகம்-334.

அன்னத்திற்குக் கால்கள் குறியனவென்று சங்க நூல்கள் கூறு கின்றன. உடலைப் பார்க்கில் அன்னத்தின் கால்கள் மிகக் குறுமையானவையே. அன்னத்தின் கால்களின் விரல்கள்

இடையே மடிப்புடைய சவ்வுத்தோல் உள்ளது. இதையே 'துதிக்கால்' என்று ஐங்குறுநூறு (106) கூறுகின்றது. யானையின் தும்பிக்கை நுனியில் இது போன்ற ஒரு சவ்வுத்தோல் உள்ளதால் அதைத் துதிக்கை என்றனர். துதிக்கால் (Webbed foot) என்ற சொல்லையே கலைச் சொல்லாகப் பயன் படுத்தலாம். அன்னங்கள் கூட்டமாக மிகுந்த விரைவுடன் பறக்கும் என்று சங்க நூல்கள் கூறும் செய்தியும் உண்மையே. குதிரைகள் கடுவிரைவில் செல்வதை அன்னப்பறவைகள் வரிசையாக விரைவாகப் பறப்பதற்கு ஒப்பிட்டுக் கூறியிருப் பதைக் காணலாம். அன்னப் பறவைகள் வானத்தில் 'V' என்ற வரிசையில் வெகு விரைவில் பறந்து செல்லும் என்று பறவை நூலார் கூறுவர். இந்த அன்னப் பறவையினத்தில் மார்க்கழியன் (Pintail) என்ற வகைப் பறவைகள் தமிழ் நாட்டிற்கு சைபீரியா, ஐரோப்பா முதலிய நாடுகளிலிருந்து குளிர் காலத்தில் வலசை வருகின்றன. மாமல்லபுரத்தில் உள்ள அர்ச்சுனன் தவம் எனும் புடைப்புச் சித்திரத்தில் இதன் உருவம் செதுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. இந்த மார்க்கழியன் தாரா மிகமிக விரைவாக (Tearing haste) வானத்தில் பறந்து செல்லும் என்று கூறுவர். சங்க நூல் களில் அன்னத்தின் விரைவு கூறப்பட்டிருப்பதால் இந்த அன்னம் மார்க்கழியன் என்றழைக்கப்படும் பறவையாகவும் இருக்கலாம். இது தமிழ்நாட்டில் வேடந்தாங்கல் முதலிய இடங்களில் காணப்படுகின்றது. கடற்கழிகளிலும், முகத்துவாரப் பகுதிகளிலும் காணப்படும்.

அன்னப்பறவை தமிழ்நாட்டிலிருந்து இமயத்துக்குச் செல்வதாக இருபாடல்கள் சங்க இலக்கியத்தில் கூறுகின்றன.

> "நிலந்தாழ் மருங்கில் தெண்கடல் மேய்ந்த
> விலங்குமென் தூவிச் செங்கால் அன்னம்
> பொன்படு நெடுங்கோட் டிமயத்து உச்சி
> வானர மகளிர்க்கு மேவல் ஆகும்
> வளராப் பார்ப்பிற் கல்கிரை ஒய்யும்
> அசைவில் நோன்பறை போலச் செல்வர்" —நற்றிணை-356

> "அன்னச் சேவ லன்னச் சேவல்
> .... .... ........ ......... .........
> ......... .. ...... ......... .........
> குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
> வடமலைப் பெயர்குவை யாயி னிடையது
> சோழநன் னாட்டுப் படினே கோழி

உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ
......... ......... ......... .........
......... ......... ......... .........
ஆந்தை யடியுறை யெனினே மாண்டநின்
இன்புறு பேடை யணியத்தன்
நன்புறு நன்கல நல்குவ னினக்கே" —புறம்-67.

அன்னப்பறவைகள் வலசை (Migration) போவதை ஓரளவு தெரிந்தே சங்கப் புலவர்கள் இப்படிப் பாடியுள்ளனர் என்று தெரிகின்றது. இவை நெடுந்தொலைவு போவதை யறிந்து கற்பனையைக் கலந்து அன்னத்தைத் தூதனுப்பிப் புலவர்கள் பாடினர். அன்னப்பறவையினத்தில் சில இமயமலையைக் கடந்து சைபீரியா முதலிய நாடுகளுக்குச் செல்கின்றன. வெயிற்காலந் தொடங்கியதும் இவை தமிழ்நாட்டை விட்டுச் செல்கின்றன. ஒருவகை அன்னம் (Mallard) தமிழ்நாட்டில் எப்போதாவது தவறி வருவதுண்டு. இதற்குச் சிவந்த கால்கள் உண்டு. இஃது இமயமலையில் காசுமீரப் பள்ளத் தாக்கில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றது. தற்போது எங்கும் காணப்படும், வளர்க்கப்படும் நாட்டுவாத்தின் மூதாதையே இந்த 'மல்லார்டு' என்ற பறவை யென்பர். வளர்க்கப்பட்டதால் நாட்டு வாத்துப் பறக்கும் தன்மையை இழந்துவிட்டதென்பர். நற்றிணை, புறநானூற்றுப் பாடல் களில் இமயமலைக்குச் செல்வதாகக் கூறப்படும் அன்னம் இந்தச் சாதிக் காட்டுவாத்தாகலாம். அன்றுடம் தெண்கடலில் மேய்ந்து இமயமலையில் இருந்த தன் வளராத குஞ்சுகளுக்கு இரையூட்டிச் சென்று வந்ததாகக் கூறுவது புலவரின் கற்பனையேயாகும். வானர மகளிருடன் வளராப் பார்ப்பைத் தொடர்புபடுத்துவதால் அது கற்பனையென்பது தெரிகின்றது. ஆனால் வளராப் பார்ப்பு இமயமலையில் இருந்ததாகக் கூறியது முக்கிய செய்தியாகும். அங்கு இந்த இனப்பறவைகள் இமயமலைப் பள்ளத்தாக்கில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிப் பதைப் பறவை நூலார் கண்டுள்ளதால் வளராப் பார்ப்பு இமயமலையில் இருந்ததாகக் கூறிய செய்தி பொருத்த மானதே. புறநானூற்றுப் பாடலில் குமரித்துறையிலிருந்து இமயமலைக்கு வலசை போகும் அன்னத்தின் செய்தி கூறப் பட்டுள்ளது. அன்ன இனப்பறவைகளில் சிலவகை வலசை செல்லுங்கால் இமயமலைப் பகுதிகளில் பிடிபட்டுள்ளன. சங்க காலத்தில் அன்னப்பறவைகள் இமயமலைக்குச் செல்வதாகப் பொதுவாக ஒரு கருத்து நிலவி வந்ததாகத் தெரிகின்றது. நற்றிணையில்தெண்கடல் என்பதைத் 'தென்கடல்' என்று பாடம் கொண்டால் புறநானூற்றுச் செய்தியொடு ஒத்திருக்கும்.

அன்னப்பறவை யினத்தில் சிலவகை தமிழ்நாட்டிலேயே தங்கி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. பெரிய தாரா அல்லது ராமச்சிறவி (Grey or spotbill duck) என்ற பறவை தமிழ்நாட்டில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றது. இதற்கும் சிவப்புக் கால்கள் இருக்கின்றன. இந்த வகை அன்னத்தையும் சங்க நூல்கள் பாடியிருக்கலாம்.

அன்னப்பறவையின் வயிற்றடியிலிருந்த தூவியை அதன் மென்மைக்காகப் படுக்கையணைகளில் பயன்படுத்தினர்.

''மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்படத்
துணைபுண ரன்னத் தூநிறத் தூவி
யிணையணை மேம்படப் பாயணை யிட்டு''
—நெடுநல்வாடை. 131-133.

''இணைபட நிவந்த நீலமென் சேக்கையுட்
டுணைபுண ரன்னத்தின் றூவிமெல் லணையசைஇ'' —கலி-72.

''இணைபுண ரெகினத் திளமயிர் செறித்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்கு''
—சிலப். 27 : 208-9.

''அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்'' —குறள்-1120.

நற்றிணையில் (356) 'விலங்கு மென்தூவி' என்று வயிற்றில் காணப்படும் மெல்லிய தூவி கூறப்பட்டுள்ளது. சிலப்பதிகார உரையில் 'தன்சேவலொடு புணர்ந்த அன்னப்பேடை அப் புணர்ச்சியான் உருகியுதிர்த்த வயிற்றின் மயிர் எஃகிப்பெய்த பலவகை அணை' என்று கூறியிருப்பதைக் காணலாம். புணர்ச்சியால் உருகியுதிர்த்த தூவி என்று சொல்லப் பட்டிருப்பது ஓரளவுதான் உண்மையான செய்தி. முட்டை யிடும் அன்னப்பறவை தன் வயிற்றிலுள்ள மெல்லிய தூவியைப் பிய்த்து முட்டைகளின்மேல் மூடிப் பாதுகாக்கின்றது. கூட்டிலும் நிறையத் தூவிகளை அணைபோல் வைக்கின்றது. இதன் காரணமாகவே புணர்ச்சியின்போது உதிர்த்த தூவி யென்று கருதினரென்று தெரிகின்றது. சங்க நூல்களில் மழைக்காலத்தில் வானில் அன்னங்கள் பறப்பதாகக் கூறிய செய்தியும் உண்மையே. செப்டம்பர் முதல் இவைகள் தமிழ் நாட்டிற்கு வரத் துவங்குகின்றன. சாய்க்காட்டில் நெல் கழனியில் அன்னங்கள் உறங்கினதாகக் கூறப்பட்டதைக் காணலாம். சங்ககாலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தருகில் இருந்த சாய்க்காட்டில் அன்னங்கள் நிறைய இருந்திருக்

கலாம். பிற்கால நூல்களில் அன்னத்தைப்பற்றிக் கற்பனை நிறைந்த செய்திகளைக் காணலாம்.

"கோலப் பாசடைப் பால்சொரிந் தன்ன
தூவெள் ளருஞ்சிறைச் சேவலோ டுளரிப்
பள்ளி யன்னம் பகலிற் றுயிலா"

—பெருங்கதை-உஞ். உவந். காட்டல். 55-53

"மணிக்க ணன்ன மணித்தகு பெடையைப்
பயிலிதழ்ப் பனிநீர்ப் பக்க நீக்கி
வெயில்கெழு வெள்ளிடை விஃடிசி ஞங்கு"

—பெருங்கதை-தேவிக்கு விலாவித்தது. 150-152

அன்னம் பால்போல் வெண்மையாக இருக்குமென்று கூறப் பட்டுள்ளது. அன்னம் பயிலும் பனிநீர்ப் பக்கத்திலிருந்து அதை நீக்கி வெயில் நிறைந்த வெள்ளிடையில் விட்டால் அது வாழாது என்பதைப் பெருங்கதை கூறுகின்றது. மிகுந்த பனியுள்ள குளிர்ந்த இடங்களில் வடமொழியில் வரும் அன்னம் வாழும் என்பதை உணர்ந்துள்ளனர். இந்த அன்னம் (Swan) சங்க நூல்கள் தமிழ்நாட்டில் காணப் பட்டதாகக் கூறும் அன்னமாக (Wild Ducks) இருக்க முடியாது என்பது தெளிவாகும்.

சில்லை :

சங்க காலத்தில் அன்னமென்று சொல்லப்பட்ட பறக்கும் வாத்து இனத்தை கி. பி. ஐந்து, ஆறும் நூற்றுண்டுகளில் தாரா என்றழைத்தனரென்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டது. நிகண்டுகளில் அன்னத்தின் வேறு பெயர்கள் கொடுக்கப் பட்டுள்ளன. அவைகளில் சில வடமொழிப் பெயர்கள். எகினம், உன்னம் என்பவை அன்னத்தின் பிற தமிழ்ப் பெயர் களாகத் தெரிகின்றன. உன்னம் என்ற பெயர் நீர்ப்பறவை களின் பொதுப் பெயரென்று சூடாமணி நிகண்டு குறிப் பிட்டுள்ளது. அன்னம் என்ற சங்ககாலப் பெயர் உன்னம் என்ற பெயரிலிருந்து மாறியதா அல்லது வடமொழிப் பெயரான ஹம்சத்தின் வழிவந்ததா என்பதைத் தெளிவாகக் கூறமுடியவில்லை. அன்ன இனப் பறவைகளில் சில்லை என்றொரு வகையை நிகண்டுகள் கூறுகின்றன. இந்தச் சில்லை என்பது பகண்டை எனவும் அழைக்கப்படும் என்று நிகண்டுகள் கூறும். 'எழுந்து வீழ் சில்லை'யென்று மணிமேகலை இதைக்

குறிப்பிடுகின்றது. இந்தப் பகண்டை நிறைய வாழ்ந்த குள மிருந்த ஊர்கள் பகண்டை என்று தமிழ்நாட்டில் அழைக்கப் படுவதை இன்றும் காணலாம். இந்தச் சில்லை அல்லது பகண்டை என்ற பறவை தற்காலத்தில் தமிழ்நாட்டிலும், ஈழ நாட்டிலும் 'சில்லித் தாரா' என்றழைக்கப்படுகின்றது. சில்லை என்பதே 'சில்லி' என்று நாட்டு மக்கள் வாயில் வழங்கு கின்றது. சில்லை, சில்லி என்ற பெயர்கள் அதன் ஓசையின் காரணமாக வந்தவையாகும். சிள் வீட்டின் பெயர் சிதடி, நெடி, சில்லிகை என்று நிகண்டுகளில் கூறப்பட்டுள்ளது. சிள்ளென்ற ஓசையை அடிக்கடி விடும் ஒருவகைப் பூச்சியைச் சில்லிகை என்றழைத்ததைக் காணலாம். இந்தப் பூச்சியைச் சுவர்க் கோழி (Cicada) என்று தற்காலத்தில் அழைப்பர். சில்லென்று அடிக்கடி ஓசையிட்டுக் கொண்டு பறப்பதைக் கண்டு (Shrill wheezy whistling notes constantly uttered on the wing is leading clue to its identity) இதைச் சில்லித் தாரா, சில்லை யென்றனர். சில்லித் தாரா வானது கிளுவை (Teal) வகையைச் சேர்ந்தது. தலைநாயறு முதலிய ஊர்களில் சில்லித் தாராவைச் சீட்டித் தாரா என்றும் செங்கிளுவை என்றும் அழைப்பர். ஆங்கிலத்திலும் இதன் பெயர் சீட்டியடிக்கும் தாரா (Whistling Teal) என்ற பொருளில் வழங்குகின்றது. சிவப்பு நிறமாயிருப்பதால் செங்கிளுவை யென்று சில்லித் தாரா அழைக்கப்பட்டது. கீச்சுக் கிளுவை யென்றுமழைக்கப்படும். கிளுவையைச் சிறவி என்றுமழைப்பர். சிறகி என்பதே சிறவி, செறவி ஆனதாகக் கூறுவர். சிங்கள மொழியில் 'செறுவா' என்றழைக்கப்படுகின்றது. கிளுவை களில் மூன்றுவகை தமிழ்நாட்டிற்கு மழைக் காலத்தில் வரு கின்றன. அவை பெரிய சிறவி, பூனைக்கண் சிறவி, தாமரை அல்லது அல்லிச் சிறவி (Blue-winged Teal, Common Teal, Cotton Teal) என்று நாட்டு மக்களால் அழைக்கப்படுகின்றன. கீச்சுக் கிளுவை என்றழைக்கப்படும் சில்லை தமிழ்நாட்டிலேயே வாழ்வது. வெளி நாட்டிலிருந்து வருவதன்று. கிளுவை வகைகள் எல்லாம் சங்க இலக்கியத்தில் அன்னம் என்ற பொதுப் பெயரால் அழைக்கப்பட்டன.

பூணி :

பிற்காலத் தமிழ் இலக்கியத்தில் சில்லையைத் தவிர வாத்துப்போன்ற வேறுசில பறவைகளும் கூறப்பட்டுள்ளன. பூணி என்றொரு பறக்கும் வாத்து இனப்பறவையைப் பெருங் கதையும் சிந்தாமணியும் குறிப்பிட்டுள்ளன.

" கருங்காற் குருகுங் கம்புளுங் கழுமிப்
பெரும்பூட் பூணியும் பேழ்வாய்க் கொக்கும்
குளிவையும் புதாவுந் தெளிகயக் கோழியும்
அன்றிலும் நாரையுந் துன்றுபு கெழீஇ "
—பெருங்கதை—நருமதை கடந்தது—68-72

" புதுக்கலம் போலும் பூங்கனி யாலும்
பொன்னிணர்ப் பிண்டியும் பொருந்தி
மதுக்கலந் தாழ்த்துச் சிலம்பிவீழ்
வனபோன் மலர்சொரி வகுளமு மயங்கிக்
கதிர்த்ததண் பூணி கம்புடாழ் பீலிக்
கணைகுர னுரைவண் டானம்
எதிர்த்ததண் புனல்சூ ழின்னதிக் கரைமே
விளையவ ரயாவுயிர்த் தெழுந்தார் "
—சிந்தாமணி-2108

பூணி, கம்புளென்பன இறந்த வழக்கு என்று நச்சினார்க்கினியர் கூறினர். ஆனால் அப்பறவைகளின் பெயர் இறந்துபட்டதேயொழிய அப்பறவைகள் இன்றும் தமிழ்நாட்டில் உள்ளன. இன்று வேறு பெயர்களுடன் வழங்குகின்றன. சிந்தாமணியில் 'கதிர்த்ததண் பூணி' என்று சொல்லப்பட்டிருப்பதைக் கவனிக்கலாம். கொண்டையுடைய சேவலை 'கதிர்த்த சென்னி' என்று அகநானூறு (103) கூறுகின்றது. கதிர் போன்று மேலெழும்பிய பூணையுடையது இந்தப் பறவை என்று தெரிகின்றது. இந்த வகையான பூணையுடைய பறவை காட்டு வாத்து இனத்தில் ஒன்று உள்ளது. இதைத் தற்காலத்தில் மூக்கன் தாரா என்று தமிழில் அழைக்கின்றனர். இதன் அலகின் மேல்நுனியில் மூக்குப்போன்று ஒரு தசையாலான பாகம் உள்ளது. இஃது அலகுக்கு மேல்நுனியில் பூண் வைத்தாற் போலிருப்பதாகக் கூறுவதும் பொருத்தமே. இந்தப் பூண் குஞ்சுபொரிக்கும் காலத்தில் பெரியதாய் வளருகின்றது. (A curious fleshy knob or comb on base of bill at forehead becoming greatly swellen in breeding season). இப்படி வளர்ந்த பூண் இதன் அலகில் இருப்பதாலேயே 'கதிர்த்த தண் பூணி' என்று சிந்தாமணியும் 'பெரும்பூட் பூணி' என்று பெருங்கதையும் இப்பறவையை அழைத்தன. பூணி என்றாலே பூணையுடையது என்று பொருள். பூணி என்பது அந்தப் பறவையின் பெயராக வழங்கிவிட்டதால் மேலும் அதன் அரிய உறுப்பை விளக்குவதற்காகப் பெரும் பூணையுடைய பூணி என்றும் கதிரையுடைய பூணி என்றும் கூறி

யுள்ளார். இந்தப் பறவையைத் தெலுங்கில் 'ஜுட்டு சிலுவா' (சூட்டுக் கிளுவை) என்றழைக்கின்றனர். கிளுவை என்பது தெலுங்கில் சிலுவா என்றழைக்கப்படுகின்றது. சூடு—அஃதாவது உச்சிக் கொண்டை உள்ள கிளுவை என்பது பொருள். சூடு என்பதே தமிழில் பூண் என்று அழைக்கப் படுகின்றது. இந்தப் பறவையின் நிறம் கிளுவையைப் போலிருப்பதால் தெலுங்கில் சூட்டுக்கிளுவை எனப்பட்டது. இந்தப் பறவை மரத்தில் காணப்படும் துளைகளில் கூடுகட்டு கிறது. நீருள்ள குளத்திலும் தடாகங்களிலும் பழகும். இதற்கு அலகில் பூண் இருப்பதால் ஆங்கிலத்திலும் இதை 'Comb duck' என்றழைத்தனர். இதை 'நாக்கி அன்சு' என்று ஒரிசா மாநிலத்தில் அழைப்பர். மூக்கையுடைய அன்னம் என்பதே இதன் பொருள். வடநாட்டு மொழி களில் இதன் மூக்கைச் சுட்டியே இதன் பெயர்கள் வழங்கு கின்றன. இப்பெயர்கள் தமிழ்நாட்டில் இன்று வழங்கும் மூக்கன் தாரா என்ற பெயருடன் ஒப்புமை உடையன. இதை ரப்பர் மூக்குத் தாரா என்று வேடந்தாங்கலில் அழைப்பர். இரப்பர் (Rubber) போன்று அலகின்மேல் தசை வளர்ந்திருப்பதால் இந்தப் பெயர் வந்தது. பூணி என்ற இறந்துபட்ட இதன் பெயரைத் திரும்ப இந்தப் பறவைக்குக் கலைச்சொற் பெயராகப் பயன்படுத்துவது நல்லது.

**கோகம் :**

சூடாமணி நிகண்டிலும் இரகுவம்சத்திலும் சொல்லப் படும் கோகம் என்ற பறவையும் ஒருவகைப் பறக்கும் வாத்தே யாகும். இதை நிகண்டுகள் சக்கரவாகம் என்றும் நேமிப்புள் என்றும் அழைக்கும். 'கோகங்க ளெல்லைப் போதிற் றணந்திட' என்று தமிழ் இரகுவம்சம் (247) கூறுகின்றது. இதைத் தாரா என்றுமழைப்பர். சக்கரவாகம் என்ற பெயர் இதற்கு வடநாட்டில் வழங்குவதாகும். இந்தி, மராத்தி மொழிகளில் இப்பெயர் வழங்குகின்றது. தெலுங்கில் பாப்பன சிலுவா (பார்ப்பனக்கிளுவை) என்ற பெயர் இதற்கு வழங்குகின்றது. இதன் ஆங்கிலப் பெயர்போல (Brahminy Duck) இப்பெயர் உள்ளது. இஃது இளஞ்சிவப்பு நிறமா யிருப்பதால் 'பிராமண வாத்து' என்று ஆங்கிலத்தில் அழைக்கப்பட்டது. சக்கரவாகமும் நேமியும் ஒரே பொருள் தருவதால் நேமிப்புள் என்ற பெயரும் வழங்கியது. வட நாட்டில் இந்தப் பறவையை அன்றில்போல இணைபிரியாத பறவையென்று காதலர்களுக்கு ஒப்பிட்டுக் கதைகள் வழங்கு கின்றன. கோகம் என்ற பெயர் இதன் தமிழ்ப்

பெயராகத் தோன்றுகின்றது. இதன் அறிவியற் பெயர் (Ruddy Shelduck, Tadarna ferruginea) என்பதாகும்.

சங்ககாலத்தில் பறக்கும் வாத்து இனப்பறவைகளை அன்னம் என்று வழங்கினர். பிற்காலத்தில் அவைகளை ஓரளவு பிரித்தும் உணர்ந்தனர். தாரா, சிறவி, கிளுவை, பகண்டை என்ற பெயர்கள் இதன் வகைகளுக்கு நாட்டு மக்களிடையே வழங்குகின்றன. கழியன் என்ற பெயரும் வழங்குகின்றது. நாட்டுமக்களிடையே நெருங்கிப் பழகித் தெரிந்துகொண்டவர்களுக்குத்தான் இந்தப் பெயர்கள் எந்த வகைப் பறக்கும் வாத்துக்களைக் குறிக்கின்றன என்று கண்டு கொள்ள முடியும். சங்க இலக்கியத்தில் வரும் அன்ன மென்ற பெயரில் கிளுவை, தாராவகைப் பறவைகளும், பூணியும், சில்லையும், கோகமும் அடங்கும்.

அன்னம் — (Wild ducks and geese — Anatidae)

சில்லை (அ) பகண்டை — (Lesser whistling Teal or Tree Duck)

— (Dendrogyna Javanica)

பூணி — (Comb Duck—Sarkidiormis melanotos)

பயன்படுத்தப்பட்ட ஆங்கில நூல்கள் :

(1) Handbook of the Birds of India and Pakistan— Salim Ali and S. Dillon Ripley—Volume—I O.U.P.

(2) A guide to the Birds of ceylon—G. H. Henry—O.U.P.

(3) Check list of the Birds of Madras State with English and Tamil Names—M. A. Badshah I.F.S.—Madras Forest Department.

(4) Guide to the Bird gallery—Madras Government museum.

———

# முசுகுந்த சோழர் வரலாறு

[வை. தட்சிணுமூர்த்தி, எம்.ஏ]

கல்லருவி தூங்குகின்ற கயிலையில் கறைமிடற்றண்ணலும் அம்பிகையும் எல்லையிலா மகிழ்ச்சியோடிருக்கும்போது வில்வ மரந்தோறும் குரங்குக் கூட்டங்கள் மிகுந்திருந்தன. இக் குரங்குகளில் ஒன்று அம்மை அப்பர் இருவர்மீதும் வில்வத்திலை வரம்பில பறித்து இட்டுக்கொண்டு வந்தது. மிகுதியான வில்வ இலைகள் வந்து வீழ்ந்த ஒரு நாட் காலை அன்னை பொருளாய் வெகுள அவள் செயல்கண்ட அண்ணல் இக்குரங்கின் பூசனைச் செயலை அன்னைக் குணர்த்தி வெகுளி போக்கிக் குரங்கிற்கு நல்லறிவாய் மெய்யுணர்வினை ஏற்படுத்தினுர். மெய்யுணர்வு சேர்ந்த குரங்கு உயர்கிளையினின்று இறங்கி அச்சத்தோடு ஐயனையும் ஆயையும் ஆர்வமொடு வணங்கிப் பொய்யடியேன் பிழை பொறுத்தருள்க என வேண்டி நின்றது. இறைவனுர், “இது பிழையெனப் பேசற்க; எமைக் கூவிளமாய வில்வ மெல் லிலைகள் இட்டு வழிபட்டாய். நீ மனித குலத்துதித்து, உலக முழுவதையும் ஆள்வாயாக” என வாழ்த்தியருளினுர். இது கேட்ட குரங்கு கலக்க மெய்தி விம்மி விதிர்ப்பெய்தி நுங்களை வைகலும் நோக்கி உவப்பாய் இங்குறைவதை விடுத்து மண்ணுலகு சென்று செல்வ வலைப்படுவனேல் எவ்வாறு உய்வேன் என இறைஞ்சி நின்றது. இறைவர் அதனைக் கேட்டுத் ‘துன்புற வேண்டாம். நிலத்திடை வைகிப் பின் னிவண் மீள்வாய்’ என அருள் புரிந்தார்.

இக் குரங்கு மண்ணுலகில் வாய்மை நிறுத்தி அரிச் சந்திரனின் ஒரு மருமான் எனப் பிறந்தது. முகம் மட்டும் குரங்கு முகமாகவே இருக்க வேண்டுமென விழைந்து, முகம் மட்டும் முசுவாகிய குரங்காயிருக்க உடல் முழுவதும் மனிதவுடலா யிருக்க முசுகுந்தன் என்ற பெயரோடு, புகழ்பெற்ற கருவூரினில் முசுகுந்த சோழனுக ஆட்சி புரிந்தார். சூரனைத் தொலைத்துத் தேவர்தம் ஆரஞர் போக்கி அருஞ்சிறை மீட்ட நன்றிக்காகத் தேவேந்திரன் த்ன் மகளாகிய தெய்வயானையினைக் கந்த வேளுக்கு வதுவையில் நல்க விழைந்து அவர் வீற்றிருந்த திருப்பரங்குன்றை அணுகி வேண்டுகிருன். உவகை சிந்தையில் பொங்கியவாறு இசைவு தந்தார். தேவேந்திரன் மூவர்க்கு மேலோன் வரிசேர் முசுகுந்தனுதிக் காவற் கடவுள் தலைவர்க்கும் ககன மேவும் ஏனைத் தேவர்க்கும் ஏனைத் திசையோர்க்கும் முனிவராவோர்க்கும் மண நாளைச் சொல்லி அழைப்பு விடுக்

கின்றான். கந்தவேளின் கடிமணச் செய்தி கேட்டு முசுகுந்த சோழர் பொங்கி மெய் பனித்தெழச் செய்தி கொணர்ந்த தூதுவர்க்குச் சிறப்புகள் செய்து தம் ஊராரும் தம் பெருஞ் சேனையும் புடைசூழ வேலேந்திய நாயகர் மணங்காண நடந்தார். இதுகாறும் நவின்றவை தேவகாண்டத்தில் தெய்வ யானையம்மை திருமணப் படலத்தில் வரும் செய்திகள்.

தட்ச காண்டத்தில் கந்த விரதப்படலத்தில் வரும் செய்திகளை இனிக் காண்போம். முரசெறி தானை முசுகுந்த வள்ளல் வசிட்டன் என்னும் அந்தணன் இருக்கை எய்தி, அடிமுறை பணிந்து போற்றி, கந்தவேள் விரதங்களின் இயல்பு களை உரைக்குமாறு வேண்டுகிறான். பகீரதன் நோற்றுப் பயனெய்திய வெள்ளி நாள் விரதம் மூன்றாண்டும் திருக் கார்த்திகை விரதத்தைப் பன்னிரண்டாண்டு மிருக்க முனிவர் கூற முசுகுந்தனும் இருந்தார். அந்நாளில் ஆறுமாமுகமுடை அமலன் இக்கோனவனுக்கு அருளுவான் வேண்டி மயில் மேலிவர்ந்து வீரபாகுவும், பிற எட்டு வீரர்களும் இலக்க வீரரும், வானவரும் கணங்களும் சூழவந்தார். முசுகுந்த மன்னன் கந்தவேளடி பணிந்து கைதொழுது பரவ, முருகப் பெருமான் ''எந்த நல்வரம் வேண்டினை அது புகல்'' என வினவினார். முசுகுந்த சோழன் ''பாரெலாம் எனது செங் கோலிடை நன்று நடப்பான் வென்றி வீரராம் ஆதிவீரர்கள் அனைவரையும் என்னோடு ஒன்றிய கேண்மையில் துணைவராகத் தருதி'' என வேண்டினன். கந்தவேள் ''அன்ன வாறுனக் குதவுவம்'' என அருள் புரிந்து நெருங்கியிருந்த தானையந் தலைவராம் [சேனைத் தலைவராம்] வீரபாகு தேவரை நோக்கி, ''நோற்ற அன்பினனான முசுகுந்தன் போற்ற நீவிர் அவனுடன் சென்று துணைவராய் இருப்பிர்'' என நவின்றார். ஆனால் வீரர்கள் செல்ல மறுத்தனர். ஞான நாயகனான முருகப் பெருமான் தன்னுரை மறுத்த அவர்களை ''மானுடராய் முசுகுந்தன் சேனையாகிப் பின் நோற்று நம் பக்கல் வருதிர்'' எனச் சபித்தார்.

குமரன் மறைய, முசுகுந்த வேந்தன் மகிழ்ந்து, வீரர்க ளோடு கருவூர் வந்து மாட வீதிகள் பல புரிவித்து வரிசை பல ஈந்து இவ்வீரர்களைத் தண்ட நாயக முதல்வர்களாக்கினான். அந்நாளில் தன்னிடம் வளர்ந்த கன்னியர் தம்மை இவ் வீரர்க்கு மணம் புரிவித்தான். வீரபாகுதேவரின் மனைவியான புட்பகந்தி என்பாள் ஈன்ற சித்திரவல்லி என்பாளை வீரபாகு தேவர் முசுகுந்தர்க்கு வதுவை செய்வித்தார். சித்திர வல்லிக்கு அங்கிவன்மன் என்ற மகன் பிறக்கின்றான்.

இவ்வாறிருக்கையில் வலாசுரன் என்பதோர் அவுணன் பன்னெடுஞ் சேனையுந் தானுமாய்ச் சென்று இந்திரனது பொன்னாட்டின்மீது படையெடுத்தான். இந்திரனுக்கு வென்றி ஏலாமையினால் பூதலம் புரக்கும் முசுகுந்த மன்னனை அழைத்து, ஏவ, முசுகுந்தன் வலாசுரனை இமைப்பினிற் கொன்று வலாரி என்ற பெயரையும் பெற்றான். இந்திரன் முசுகுந்தனைத் தன் பெருங் கோயிலுள் கொண்டு சென்று போற்றி அவனோடு சென்று மால்தொழுந்தேவனாய, சோமாஸ்கந்தன் உரு வத்தைத் தொழுதான். இருந்த காட்சி கண்டு போற்றி வழிபட்டான். “ இறைவனே மொழிகேட்ட எம்பிரான் கருணை செய்து '' ஆழியானாய திருமால் அளப்பில் காலம் உவகையால் வழிபாடாற்றி “உம்பர்கோன் இடத்தில் வைத்தான் புவிதனிற் கொடுபோய் நம்மைப் பூசனை புரிதி'' என அருளினார். இந்திரன் செய்த விருந்தினையும் ஈந்த மணி, முத்து, தெய்வதப் படை முதலிய அன்பளிப்புகளையும் பெற்றபிறகு முசுகுந்த சோழன் “இமையா முக்கட் பாவையோர் பாகன்'' சிலையைத் தருமாறு வேண்டுகிறான். இந்திரன் முதலில் மறுக்க, கேசவனை வேண்டி இறுதியில் இந்திரனிடமிருந்து சிலையைப் பெறுகிறான். உண்மைச் சிலையைக் கொடுக்க ஒருப்படாத இந்திரன் ஆறு போலிச் சிலைகளைச் செய்து காட்டி இவற்றுள் எது உண்மையோ அதனை எடுத்துக் கொள்க என, முசுகுந்தர் இவற்றுள் எவையுமே அவ்வுண்மைச் சிலையல எனச் சுட்டு கிறார். இறுதியில் இந்திரன் உவந்து உண்மைச் சோமாஸ் கந்தர் சிலையோடு ஆறு போலிச் சிலைகளையும் உவந்தளித்தான். அச்சிலைகளைக் கொணர்ந்து முசுகுந்தர் ஒரே பகலில் திருவாரூர்ப் பூங்கோயில், கடல் நாகைக் காரோணம், திரு நள்ளாறு, திருக்காறாயில், திருக்கோளிலி, திருவாய்மூர், திரு மறைக்காடு முதலிய திருக்கோயில்களை நிறுவினார்.

முசுகுந்த மன்னர் அரசினைத் தம் மகன் அங்கிவன்மனிடம் விடுத்துக் கயிலை அடைந்தார். வீரர்கள் தத்தம் கடமைகளைத் தம் மக்களிடம் விடுத்து அங்கிவன்மனுக்குத் துணைபுரியச் செய்துவிட்டு முருகனைத் தவமியற்றத் தொடங்கினர்.

மாந்தாதாவின் மக்கள் மூவரி லொருவனாக இம் முசு குந்தனைப் பாகவத புராணம் மொழிவதாக நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் சோழர் சரித்திரம் என்ற நூலில் எழுதியுள்ளார்.

சிலப்பதிகாரக் கடலாடு காதையில் நாளங்காடிப் பூதத்தையும், ஐவகை மன்றங்களையும் பற்றிக் கூறும்

போது இளங்கோவடிகள் முசுகுந்த சோழர் அமராபதியைக் காத்த செய்தியைக் கழறுகின்ருர். "கடுவிசையவுணர் இடனுங் காண்குதும்" என்ற அடிகட்கு அடியார்க்கு நல்லார் உரையில் "மிக்க வேகத்தினையுடைய அசுரர் கூட்டமாக வந்து நெருங்கி இந்திரனது நகரைக் காத்த புலிபோன்ற வலியையுடைய முசுகுந்தனுக்குத் தோற்றுப் பின்பு தம்மில் ஒத்துக்கூடி முசுகுந்தனது நெஞ்சமும் இருள் கூரும்படி பிரயோகித்த அத்திரத்தைப் போக்கிய பெரிய பூதத்தை அவ்வண்ணல் பொருட்டு இந்திரன் ஏவப் போந்து அப்புகாரிலிருந்து அது பலியுண்ணும் நாளங்காடியிடம் காண்பேமென்ருனென்க" என்ருர். இந்திரன் முசுகுந்தனுக்கு மெய்காவலாக நாளங்காடிப் பூதம் நல்கினுன் என்பது இதனுல் பெறுகிறது. அமராபதி காத்தமைக்காக இந்திரன் ஐவகை மன்றங்களை முசுகுந்தர்க்கு நல்கியுள்ளான். அவை பொய்வகையின்றி இன்றும் உள என்பதை "அமராவதி தொடங்கும் அதே காதை அடிகளாற் கூறினுர். முசுகுந்த மன்னற்கு வரும் இடையூற்றை ஒழிக்கவென நாளங்காடிப் பூத நல்கிய செய்தி இந்திர விழவூரெடுத்த காதையிலும் கூறப்படுகிறது. வாழ்த்துக் காதையில் அம்மானைவரியில் "ஓங்கரணம் காத்த உரவோன்" "தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்" என்றும் முசுகுந்தன் போற்றப்படுகிருன். அரணம் என்பது அமராபதிக் கோட்டையைக் குறித்தது. இச்செய்தி மணிமேகலை விழாவறை காதையிலும் கூறப்படுகிறது. சிறப்புக்குரிய இவ் வைவகை மன்றங்களின் இயல்பைச் சிலம்பு இந்திர விழவூரெடுத்த காதையில் காண்க. முசுகுந்தன் அமராபதி காத்தமையை "பொருதுறைத்தலை புகுந்து முசுகுந்தனிமையோர் புரமடங்கலும் அரண் செய்து புரந்த புகழும்" எனச் சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியில் இராசபாரம்பரியம் நவிலும்போது நாரதர் வாயிலாக நவில்கின்ருர். திருவாரூர் ஒருதுறைக் கோவையில்,

> "பூவசம் செய்துவின்னேரு புணர்புகை போக்கியவோர்
> கோவசம் செய்வன ராரூர்த் தியாகர்"

என வருகின்றது. முசுகுந்தனைப் பற்றி விண்டு புராணத்தில் வரும் செய்தியொன்றை நாட்டாரய்யா அவர்கள் எழுதியுள்ளார்கள். முசுகுந்த மன்னன் அவுணரைத் தொலைக்க அமராபதி மன்னற் குதவி வெற்றி வாங்கித் தருகையில் கேட்ட வரங்களில் ஒன்று போர்த் தொழிலால் நெடுநாள் உறங்காமையால் களைப்புற்றிருப்பதால் நெடுங்காலம் துயிலும்படி வாய்ப்பளிக்க வேண்டியது. நின்னைத் துயிலெழுப்புவோன் யாவனுயினும் சாம்பராவான் எனவும் வரங் கிடைத்தது. கண்ணனைத்

தாக்கக் கருதி யவன நாட்டரசன் காலவாயனன் மதுரையை முற்றுகையிடுகிருன். துவாரகைக்கு மக்களையனுப்பிவிட்டுக் காலவாயனனுக்குப் போக்குக் காட்டிக் கண்ணன் ஒரு மலை முழைஞ்சினுள் நுழைகிருன். அம் முழையினுள் முன்பே சென்று துயின்றுகொண்டிருந்த முசுகுந்தனைக் கண்ண னென்று பிழைபட எண்ணிக் காலவாயனன் காலால் உதைக்க அக்காலவாயனனின் காலம் சாம்பராகியது. கண்ணபிரான் முசு குந்தனை நோக்கி ''நீ விரும்பிய நல்லுல கடைந்து, நல்லின்பம் துய்த்து, பழம் பிறப்புணர்ச்சியுடையனுய் முத்தியடைவாய்'' என அருள, கலியுகம் அறிந்த முசுகுந்தன் தவம்புரியக் கந்த மாதனம் அடைந்தான்.

முசுகுந்தன் பேராற்றலும் பெரும் புகழுமுடைய ஒரு தென்னுட்டு மன்னவன் என்பது உறுதி. இவன் புகாரை ஆண்டதாகச் சிலம்பும், கருவூரை ஆண்டதாகக் கந்த புராணமும் கூறுகின்றன.

---

தென்திசை மருங்கினேர் செழும்பதி தன்னுள்
இந்திர விழவுகொண்டு எடுக்குநாள் இதுவெனக்
கடுவிசை அவுணர் கணங்கொண் டீண்டிக்
கொடுவரி ஊக்கத்துக் கோநகர் காத்த
தொடுகழன் மன்னர்க்குத் தொலைந்தன ராகி.

—சிலப். சு : ரு-கூ.

ஆய வழிப்படும் அம்முசு குந்தன்
தூய பொலன்முடி தொன்முறை சூடி
மாயிரு ஞால வளாகம துள்ள
தேயமெ லாமொர் செகிற்கொடு காத்தான். 45

ஓவறு சீர்க்கரு வூரிடை மேவிக்
கோவிய லோம்புறு கொள்கைய னுகித்
தேவரை யேவல்கொள் சீர்கெழு சூரன்
காவலி னுணை கடக்கல னுற்ருன். 46

—கந்தபுரா. தெய்-திருமணப்படலம்.

# இறைமையில் இசைந்த வாழ்வு

## தன்னையுணர்ந்து தகைமையுறுதல்

### (11)

(சிலம்பு-சசு, பரல்-ரு, கஙo ஆம் பக்கத் தொடர்ச்சி)

[திரு. மா. சண்முகசுப்பிரமணியம்]

ஓர் அனாதைச் சிறுவன். வயது பதினைந்து இருக்கும். ஆதரவற்றோர் விடுதியில் வளர்ந்துவந்த அச்சிறுவன் வேலை தேடி, பிழைப்பை நாடிச் சென்னைக்கு வந்தான். எங்கெங்கோ வேலைக்கு அலைந்தான்; வேலை கிடைக்கவில்லை. அவன் கையிலிருந்த சிறு தொகையும் செலவாகிவிட்டது. அவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

சில நாட்கள் சென்றன. அவன் ஏதும் உண்ணவில்லை; உணவு கிடைக்க வழியில்லை. அவன் கால்கள் சென்ற வழியில் நகரெங்கும் அலைந்தான். மாலை நேரத்தில் 'மெரினா' கடற்கரையில் மக்கள் களிப்புடன் உலாவிப் பொழுதுபோக்குவதைக் கண்டான். ஆனால், இதமான கடற்காற்று சிறுவனின் இதய வேதனையைத்தான் பெருக்கியது. விரைந்து ஓடும் 'கார்'களில் செல்வோர்களையும், வேகமாக நடந்து செல்வோர்களையும் பார்த்துக்கொண்டே அவனும் நடந்தான். அவர்கள் எல்லோரும் ஏதோ ஒரு தனி உலகத்தைச் சேர்ந்தவர்கள் போலவும், தான் வேறோர் உலகத்தில் இருப்பதுபோலவும் அவனுக்குத் தோன்றியது. கன்னங்கள் ஒட்டி, கண்கள் ஒளியிழந்து, தளர்ந்து நடந்து சென்ற அவனை யாருமே பார்த்ததாகத் தெரியவில்லை; அவனது நிலைமைபற்றி எவருமே கேட்கவில்லை. நடந்து நடந்து அவன் கால்கள் ஓய்ந்தன. பசியால் அவன் கண்கள் பஞ்சடைந்தன. வீதியின் ஓரத்திலே அச்சிறுவன் மயங்கி விழுந்துவிட்டான். நெஞ்சை அழுத்திக் கொண்டிருந்த துயரம் அவன் நினைவை மறைத்துவிட்டது. நினைவிழந்த நிலையில் நீண்ட நேரம் அவன் வீதியின் ஓரத்தில் கிடந்தான். ............ .......... .......... .......... மீண்டும் அவன் கண்களை விழித்துப் பார்த்தான்! அப்பொழுது அவன் கண்ட காட்சி! அக்காட்சி அவனை வியப்பிலே ஆழ்த்தி விட்டது!

ஒரு மாளிகையில் மஞ்சத்திலே அவன் படுத்திருந்தான். நடுத்தர வயதுள்ள கணவனும் மனைவியும் அவனது உடலைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தனர்; அவன் பசியும் களைப்பும் நீங்கும்படி பாலும் பலவகை உணவுகளும் கொடுத்

தனர். தன்னுணர்வு பெற்று அவன் எழுந்ததும் அவனை அன்போடு அணைத்து அவர்கள் களிப்புக் கண்ணீர்விட்டனர். தன் வாழ்க்கையில் முதன்முதலாகத் தன்மீது அன்பு செலுத்திக் கண்ணீர்விடும் அவர்கள் இருவரையும் கண்டதும் சிறுவனுக்குப் புதியதோர் அனுபவம் பிறந்தது.

"மகனே! நீ மிகச் சிறுவனாக இருக்கும்பொழுது ஒரு திருவிழாக் கூட்டத்தில் உன்னைத் தவற விட்டுவிட்டோம். எங்கெங்குத் தேடியும் உன்னைக் காணாமல் நாங்கள் பட்டுக் கொண்டிருந்த கவலைக்கு அளவே இல்லை. நைந்த உள்ளத்துடன் நாட்களைப் போக்கி வந்தோம். நீ எப்படியும் எங்களிடம் வந்து சேருவாய் என்ற நம்பிக்கை மட்டும் எங்களுக்கு இருந்தது. அந்நம்பிக்கை வீண் போகவில்லை. வீதியின் ஓரத்தில் விழுந்துகிடந்த உன்னைத் தற்செயலாக நேற்று அடையாளங் கண்டு வீட்டிற்கு எடுத்து வந்தோம். உன்னை எங்களிடமிருந்து பிரித்துவைத்த விதி மீண்டும் உன்னை எங்களிடம் சேர்த்துவிட்டது! இந்த மாளிகையும் எங்கள் செல்வங்களனைத்தும் இனி உன்னுடையவைதாம்!" என்று கூறி அச் சிறுவன்மீது தங்கள் அன்பைப் பொழிந்தனர், அவன் பெற்றோர்கள். விலையுயர்ந்த ஆடைகளையும் அவன் விரும்பிய பொருள்களையும் அவன்முன் குவித்தனர்.

அனாதை என்று தன்னை எண்ணிக்கொண்டிருந்த சிறுவனுக்குச் செல்வ மிகுந்த பெற்றோர்கள் கிடைத்து விட்டனர்; இந்நிலையில் அச்சிறுவன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேது?

இரண்டு நாட்களில், பளபளக்கும் பெரிய காரிலே அவன் சென்னை மாநகரின் வீதிகளில் சென்றுகொண்டிருந்தான். விட்டுவிட்டுப் பளிச்சிடும் விளம்பர விளக்குகள் இரண்டு நாட்களுக்கு முன் அவனை நோக்கிப் பரிகசிப்பதுபோல் மின்னிக்கொண்டிருந்தன; ஆனால், இன்றோ அவனைக் கண் சிமிட்டி வரவேற்பதுபோல் ஒளியுமிழ்ந்து அவன் இதயத்திற்கு அவை இன்பம் ஊட்டின! அவன் கடற்கரைக்குச் சென்றான். அவன் உள்ளத்தில் எழுந்துகொண்டிருந்த ஓயாத உவகை அலைகள்போல் நீலக்கடலின் நீளலைகள் இடையின்றி எழுந்து கொண்டிருந்தன. வீசிய கடற்காற்று அவன் உள்ளத்தின் குளிர்ச்சியை அவன் உடலுக்கும் அளித்தது. கவின்மிகு நகரத்தின் கண்கவர் காட்சிகளனைத்தும் அவனது இன்ப வாழ்விற்கென்றே இசைத்து வைக்கப்பட்டன போல் தோன்றின!

அனுதைச் சிறுவனுக இருந்தபோது அன்றிருந்த அவன் மனநிலைக்கும், அரிய செல்வத்திலே திளைக்கும் இன்றுள்ள அவன் மனநிலைக்கும் எத்தகைய வேறுபாடு!

இத்தகைய வேறுபாடு உண்டு, மனிதன் தன்னை அறியாத நிலைக்கும், தன்னை அறிந்துகொண்ட நிலைக்கும்!

அனுதை என்று நினைத்துக் கொண்டிருந்தபொழுது அச்சிறுவனுக்குச் சமுதாய உறவு ஏற்படவில்லை; எனவே, தன்னை வாழ்விலே வறியவன் என்று எண்ணினுன். இது போன்றே, தன்னை அறிந்துகொள்ளாத மனிதனுக்கு இயற்கையோடு இயைபு ஏற்படுவதில்லை. இயற்கை காட்டும் இறைமையோடுள்ள உறவினை அவன் உணருவதில்லை. சென்னை மாநகரின் சீர்மிகு தோற்றங்கள் அனுதைச் சிறுவனுக்குப் பொருளற்றதாகவே தோன்றின; அதுபோன்றே இறையுணர்வு பெற்றுத் தம்மை அறியாதார்க்கு இயற்கையின் எழிலார்ந்த தோற்றங்களும், எல்லையில்லா ஆற்றலும் பொருளற்றதாகவே தோன்றுகின்றன. "எங்கிருந்தோ வந்தோம், எதற்கோ வந்தோம், எங்கேயோ செல்கின்றேம்!" என்ற எண்ணத்திலே குறியும் நெறியுமின்றி அவர்கள் நாட்களைப் போக்குகின்றனர்.

படருவதற்குக் கொம்பில்லாத கொடி எவ்வாறு காற்றிலலைந்து தவிக்கின்றதோ அவ்வாறே தன்னையறியாத மனித உள்ளம் அலமந்து நிற்கிறது:

> "கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன் கோமளமே"
>
> (திருவாசகம் - நீத்தல் விண்ணப்பம்)

என்பது அவ்வாறு தவிக்கும் உள்ளத்தின் குரலாகும்.

கோடை வெப்பத்தால் குளத்துநீர் வற்றியபின் குளத்தில் வாழும் மீன்கள் எவ்வாறு துடிக்கின்றனவோ அவ்வாறு துடிக்கின்றனவாம், இறைமை உறவை உணராத உள்ளங்கள்:

> "பெருநீரறச் சிறுமீன் துவண்டாங்கு நினைப்பிரிந்த
> வெருநீர்மை யேனை........."

என்பது மனித உள்ளத்துடிப்பை உரைப்பதாகும்.

ஆனல், இயற்கையின் ஆற்றலைச் சிந்தித்து, அந்த எல்லையில்லா ஆற்றலில் அமையும் இறைமையின் ஏற்றத்தைக்

கண்டு, அந்த இறைமையோடு உறவு கொண்டுள்ளோம் நாம் என்ற உண்மையை உணர்ந்த பின் நாம் அடையும் பேருவகைக்கு ஈடேது? அனுதைச் சிறுவன் அடைந்த இன்பத்தை விட நாம் பெறும் இன்பம் எத்தனை எத்தனையோ மடங்கு உயர்ந்தது! "பல இலட்சம் பணம் உடைய தந்தையின் வழித்தோன்றல் நான்" என்று கூறிக்கொள்ளும் பொழுது உள்ள பெருமிதத்தைவிட, "அகிலாண்டங்களையும் தன்னுள் அடக்கி நிற்கும் இறைமையின் தோன்றல் நான்" என்று எண்ணும் பொழுது ஏற்படும் பெருமிதம் எத்துணை வேறுபாடுடையது! இன்று இருந்து நாளை அழியும் செல்வத்தால் பெறும் இன்பத்தைவிட, என்றும் அழியாத செல்வத்தை அடைந்தவர் பெறும் இன்பம் எத்துணை மடங்கு அதிகமாகியிருக்கும்? உடலுறவுடைய பெற்றோர்களைக் காணும் இன்பத்தைவிட, உயிர் உறவுடைய இறைமையை எய்தும் இன்பம் எவ்வளவு உயர்ந்ததாக இருக்க வேண்டும்?

நம்முடைய உடலுக்கு மூலமானோர் நம் பெற்றோர்கள்; அப் பெற்றோர்களை நினைத்து நாம் பெருமைப் படுகிறோம். எனில், நம்முடைய உயிருக்கு மூலமான இறைமையை நாம் நினைக்க வேண்டாவா? எனவே தான், உயிருக்கு மூலமான இறைமையைத் தந்தையாகவும் தாயாகவும் மனித உள்ளம் எண்ணி இறும்பூது எய்துகின்றது.

மெய்யடியார்கள் உண்மையில் இறைமையையே தம் தாயாகவும் தந்தையாகவும் கொண்டார்கள்!

"என்னை, அப்பா, அஞ்சல் என்பவர் இன்றி நின்றெய்த்தலைந்தேன்
..................................................................
..................................................................
"அன்னை ஒப்பாய், எனக்கத்தன் ஒப்பாய், என் அரும்பொருளே"
(நீத்தல் விண்ணப்பம் - திருவாசகம்)

என்று இறைமையை அன்னையாகவும் அப்பனுகவும் அவர்கள் ஏத்துகின்றனர்.

"அம்மையே அப்பா ஒப்பிலாமணியே" (திருவாசகம்)

என்றும்,

"அப்பனே! அடலாழியானே" (திருவாய்மொழி)

என்றும்,

''தந்தையும் தாயுமாகித் தானவன் ஞானமூர்த்தி''
(நாவுக்கரசர்)

என்றும் இறைமையைத் தந்தையாகவும் தாயாகவும் கொண்டு பாடியுள்ளனர்.

கொடிவழி உறவிலும் இறைமை தந்தையாக, தந்தைக்கும் தந்தையாக, எல்லோருக்கும் முந்திய தந்தையாக உள்ளது.

''எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும்
முந்தை..........................................''
(திருவாய்மொழி)

என்று வாழையடி வாழையென மரபுவழி வந்த தந்தை உறவு போற்றப்படுகிறது.

உலகத்திலுள்ள யாவர்க்கும் தந்தையாகவும் தாயாகவும் இருக்கின்றது இறைமை. ஆனல், இறைமைக்கோ தந்தை தாய் எவருமில்லை.

''எந்தையாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும்
தந்தைதாய் தம்பிரான் தனக்கஃதிலான்''
(திருவாசகம்)

இவ்வாறு, இறைமை உலக உயிர்கள் அனைத்திற்கும் தந்தையாக, தாயாக இலங்குவதை எடுத்துக் கூறியுள்ளனர் இறைமை உறவினை உணர்ந்த பெரியோர்கள்.

தாய் தந்தையர் கொடுத்த உடல் இன்றிருந்து நாளை அழிவது; ஆனல், இறைமை அளித்த உயிரோ என்றும் அழிவில்லாதது.

அழிவில்லாதது நம் உயிர் என்ருல் அஃது என்றும் இருப்பது என்றுதானே கொள்ள வேண்டும்? இறுதி இல்லாதது உயிர் என்ருல் அதற்குத் தோற்றமும் இல்லை என்றுதானே பொருள்? முதலும் முடிவும் இல்லாத, ஆதியும் அந்தமும் அற்ற இறைமையில் இருந்து எழுந்த நம் உயிருக்கும் முதல் முடிவு, ஆதி அந்தம் இவை இல்லை.

ஆதலால்தான் இறைமையைப் பாடும் அடியார்கள், 'நீ என்று உள்ளாயோ அன்றிலிருந்து நானும் உள்ளேன்' என்று கூறுகின்றனர்:

"என்றுளைநீ அன்றுளம்யாம் என்ப தென்னை
இதுநிற்க எல்லாந்தாம் இல்லை யென்றே
பொன்றிடச் செய்வல்லவனீ ரெமைப் படைக்கும்
பொற்புடையாய் என்னின்று பொருந்திடாதோ"

(தாயுமானவர்)

"இறைமையே! நீதான் என்னைப் படைத்தாய், படைக்கப்படும் பொருளில் படைக்கும் பொருளின் பண்பு உண்டன்றோ? எனவே, இயற்கைப் பொருள்களில் எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் நீயும் நானும் என்றுமே உள்ளோம்'' என்கிறது, ஞானியர் உள்ளம்.

ருசிய நாட்டு ஞானி டால்ஸ்டாய் (Tolstoy) "போரும் அமைதியும்'' (War and Peace) என்ற பெயரில் ஒப்பற்ற நெடுங்கதை யொன்றினை உலகுக்கு அளித்துள்ளார். அக் கதையில், ஞானி டால்ஸ்டாய் தம் ஞானமொழிகளை யெல்லாம் 'பியரீ' என்ற பாத்திரத்தின் வாயிலாகக் கூறி யுள்ளார். 'பியரீ' தன் நண்பனுன படைத்தலைவன் ஆண்ட்ரூ என்பவனிடம் கூறுகின்றான் :

"........எல்லையற்றதாய் இணைந்து விளங்கும் இந்த இயற்கையோடு இசைந்துள்ளேன் நான் என்பதை என் ஆன்மா உணர்த்துகின்றது. எண்ணற்ற உயிரினங்களனைத்திலும் உறைந்து பொலியும் இறைமை என்ற இணையற்ற ஆற்றலில் நானும் ஓர் இணைப்பாக இருப்பதை உணருகிறேன்.......இந்த உலகிலுள்ளவை எதுவும் மறைவதில்லை; எனவே, நானும் மறையப்போவதில்லை. நான் என்றுமே இருப்பேன், என்றும் நான் இருந்தேன்......."

"என்றுளை நீ, அன்றுளம் யாம்'' என்ற ஞானத்தினை உலகிலே ஆங்காங்குள்ள மெய்ஞ்ஞானிகள் உணர்ந்து கண்டனர்.

"இறைமையோடு உறவுடையோம் யாம்'' என்ற எண்ணத்தால் "நாம் என்றும் இருந்தோம், என்றும் இருப்போம்'' என்ற உறுதிப்பாட்டால், நம் உள்ளத்திலே பொங்கும் பெருமிதத்திற்கு அளவேது, அறுதியேது?

ஒரு சிறிய பம்பரத்தைக் கயிற்றிலே சுழற்றி வீசுகின்றோம். பம்பரம் சுழலுகின்றது; ஆனுல், ஒரு நிமிட நேரத்திலே அஃது ஒய்ந்து விழுந்து விடுகிறது. நாம் வாழும் பூமிதான் எவ்வளவு பெரியது! பரவெளியிலே அது சுழன்று கொண்டே இருக்

கின்றதே. அதுவும் ஒரே கதியில், ஒரே வேகத்தில் சுழன்று ஓடிக்கொண்டிருக்கிறதே! தன் சுழற்சியிலே அஃது ஓய்ந்து விட்டால், சுழலும் தன் கதியிலே அது சிறிது விலகி விட்டால் பருவங்கள் வருவது தவறிவிடும், பாரினில் உயிர்கள் கருகி விடும்!

இத்தனை மணி, இத்தனை நிமிடம், இத்தனை விநாடிக்கு அருணோதயம் என்று அறுதியிட முடிகின்றதே! விநாடி தவருமல் செம்பிழம்பு வட்டம் கீழைவானத்தில் கிளம்பி எழுகின்றதே! இந்த நாளில், இந்த விநாடியில் சந்திர கிரகணம், சூரிய கிரகணம் என்று துல்லியமாகக் கணக்கிடு கின்றோமே! இஃது எவ்வாறு இயலுகின்றது? பூமியும் சந்திரனும் தங்கள் கதியில் அணுவளவும் பிசகாது சுழன்று கொண்டிருப்பதால் தானே? இந்தச் சுழற்சி தொடங்கியது இன்ரு, நேற்ரு? எத்தனை கோடி ஆண்டுகளாகச் சுழன்று கொண்டிருக்கின்றனவோ! இன்னும் எத்தனை எத்தனை கோடி ஆண்டுகள் சுழலப் போகின்றனவோ!

''அலை கடலும் புவிவரையும் அனல்கால் நீரும்
அந்தரமும் மற்றை அகிலாண்டம் யாவும்
நிலை குலையா வண்ணம் அருள்வெளியி னூடு
நிரைநிரையா நிறுத்திஉயிர் நிகழும் வண்ணம்''

(இராமலிங்கர்)

இயங்கி எங்கும் நிறைந்ததாய், எல்லாம் அறிந்ததாய், யாதும் வல்லதாய் விளங்கும் இறைமையின் அருளாற்றலை எண்ணிப் பார்க்கவும் எளிதன்று! ''இத்தகைய இறைமையின் உறவினை உடையோம் நாம்'' என்ற எண்ணத்தால் நாம் இறும்பூது எய்துகின்ரும்!

''அண்டங்கள் யாவையும் ஆக்கினேன் நான்,
அவை பிழையாமே சுழற்றுவோன் நான்''

(பாரதியார்)

என்று இறைமையின் அருளாற்றலோடு ஒன்றி விடுகின்றனர், உண்மையுணர்ந்த ஞானியர்.

இறைமையோடு உறவு கொண்டுள்ளோம் என்ற உறுதிப் பாடு உள்ளத்தில் உதித்த பின்னர், இறைமை வேறு நாம் வேறு என்று இரண்டுபடக் கருதும் எண்ணம் அழிந்து விடு கிறது. இந்த இருமை எண்ணம் அழிந்தபின் அறியாமை என்ற மாயை மறைந்து விடுகின்றது. இருமை எண்ணத்தை

அழித்து ஒருமையைக்கண்டு தெளிந்தவர்கள் முன் அறியாமை என்ற மாயை ஓடி ஒளிந்து கொள்ளுகிறது :

''இருமை அழிந்தபின் எங்கிருப்பாய் அற்ப
மாயையே !—தெளிந்து
ஒருமை கண்டார் முன்னம் ஓடாது
நிற்பையோ?—மாயையே !''

(பாரதியார்)

என்கிறார், ஒரு ஞானக்கவி.

எல்லாம் வல்ல இறைமையோடு, அதன் அளப்பரிய ஆற்றலோடு உறவு கொள்ளும் நமக்கு எதிராக எத்தனை கோடி இடர்கள் வந்தாலும் நாம் அஞ்சுவோமா ?

''சித்தி னியல்பும் அதன்பெருஞ் சக்தியின்
செய்கையுந் தேர்ந்து விட்டால்—மனமே !
எத்தனை கோடி இடர்வந்து சூழினும்
எண்ணஞ் சிறிது முண்டோ ?''

(பாரதியார்)

இறைமை உறவை உணராத நிலையில் உள்ள அறியாமை என்ற இருள் நீங்கியவுடன் ஆன்ம ஒளி வீசுகின்றது ; இன்பத் தேன்மடை உள்ளத்திலே பெருகுகின்றது. பெருகும் அந்த இன்பத்தேன் வெள்ளத்தைப் பருகி நாம் இறுமாந்து இருக்கின்றோம்.

''ஆன்ம வொளிக்கடல் மூழ்கித் திளைப்பவர்க்கு
அச்ச முண்டோடா ?—மனமே !
தேன் மடையிங்கு திறந்தது கண்டு
தேக்கித் திரிவ மடா !''

(பாரதியார்)

நம்மை யாரென்று நாம் தெரிந்து தெளிந்துகொள்ளு வதற்கு இறையுணர்வு வேண்டும். இறையுணர்வால் நமக்குள்ள இறைமை உறவு தெளிவாகின்றது.

நமக்குள்ள இறைமை யுறவினை உணராமல், நம்மை யாரென்று தெளியாமல் இருக்கும் நிலையே உண்மையான ஏழ்மை நிலை என்று உருகிப் பாடுகின்றார், ஓர் அடியார் :

''என்னையின்ன தென்றறியா ஏழைக்கு மாகெடுவேன்
முன்னைவினை கூடன் முறையோ பராபரமே.''　(தாயுமானவர்)

இறையுணர்வு பெறுவதன் பயன் நம்மை நாமே உணர்ந்து கொள்ளுவதுதான். இறையுணர்வின் பயனாகத் தான் நமக்குள்ள இறைமை உறவினை நாம் தெளிந்து தேர்கின்றோம். இறைமையுணர்வே நம்மை நமக்கு உணர்த்து கின்றது. இந்த உண்மையை உணர்த்தும் வகையில் பாடு கின்றார், ஒரு மெய்யடியார் :

> "அன்னை போல வருண்மிகுத்து, மன்னு ஞான வரதனே
> என்னையே எனக்களித்த, நின்னையானு நினைவனே !"

(தாயுமானவர்)

"என்னை யாரென்று உணரச் செய்தாய்" என்பதை "என்னையே எனக்கு அளித்தாய்" என்று இதமாகக் கூறு கின்றார், அவ்வடியார்.

> "நங்கள்கோனே ! யானே நீயாகி என்னை யளித்தானே !"

(திருவாய்மொழி - பக். 841)

இறைமையுடன் கொண்டுள்ள தங்கள் ஆன்ம உறவை இவ்வாறு அடியார்கள் பாடுகின்றனர்.

நமக்குள்ள இறைமை உறவினை நாம் தெளிந்து கொள்ளுவதே நமது இறையுணர்வின் பயனாகும், அப்பயனின் பண்புமாகும்.

இந்த அடிப்படையில்தான் 'உன்னை அறிந்துகொள்' (Know Thyself) என்று மெய்ஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

> "தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே—ஒரு
> தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே"

என்று மெய்ஞ்ஞானத்தை நாடும் மனம் ஏங்குகிறது.

"இத்தனை காலமும் என்னை யறியாது இருந்து விட்டேன்; என்னை அறிந்தபின் இனி அறிந்துகொள்ளு வதற்கு ஏதுமே இல்லை" என்கின்றார், மற்றோர் அடியார் :

> "என்னை அறிந்திலேன் இத்தனை காலமும்
> என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலேன்."

(திருமூலர்)

"தன்னை அறிந்தவன் கேடற்றவன், தன்னை அறியா தவன் கேடுற்றவன்" என்கின்றார், அவர்.

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்."  (திருமூலர்)

"இறைமை உறவுடையோம் நாம்" என்றால் இறைமை யாகவே நாமும் ஆகிவிடுகின்றோம்; இறைமையும் நாமும் ஒன்றாகிவிடுகின்றோம்," என்பதன்று. ஓவியம் ஒன்றைத் தீட்டியவனின் பண்பு தீட்டப்பட்ட ஓவியத்தில் அமைந்திருப் பதுபோல் இறைமையின் பண்பு இறைமையில் விளைந்த நம்மிடம் அமைந்துள்ளது. இதனால் நாம் இறைமை உறவுடையோர் ஆகின்றோம், ஆனால் இறைமையாகவே ஆகி விடுவதில்லை.

கிண்ணத்தில் எடுத்த கடல்நீரும், கடலில் உள்ள நீரும் உப்புநீர்தான். அதில் வேறுபாடு இருப்பதில்லை; எனினும், கிண்ணத்து நீரும் கடலும் ஒன்றாகிவிடுவதில்லை.

இவ்வாறு இறைமை உறவினை உணர்ந்த மனிதனுக்கு அச்சம் இல்லை, அயர்வு இல்லை; இடர் இல்லை, ஏக்கம் இல்லை. இயற்கையோடு இயைந்து இறைமையை உணர்ந்து இறைமை உறவினைத் தெளிந்துகொண்டோர்க்குத் துன்ப மேது? துயரமேது?

"கூறும் நாவே முதலாகக் கூறும் கரணம் எல்லாம்நீ
தேறும் வகைநீ திகைப்பும்நீ தீமை நன்மை முழுதும்நீ"

என்று இறைமையைக் கண்டு, அந்த இறைமையோடு உறவு கொள்ளும் மனிதனுக்குத் திகைப்பும் நன்மையும் தீமையும் இருக்க இயலாததன்றோ? "இன்றோர் இடையூறு எனக் குண்டோ?" என்று கூறி இறும்பூது எய்துகின்றது, இறைமை உறவினை எய்திய உள்ளம். அத்தகைய உள்ளத்திற்குப் புகழும் பொருளும் எதற்கு? அது மண்ணையும் விண்ணையும் வேண்டுவதில்லை; பிறப்பையோ இறப்பையோ விரும்புவ தில்லை:

"வேண்டேன் புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன்
மண்ணும் விண்ணும், வேண்டேன் பிறப்பிறப்பு......"

இவ்வாறு இறைமை உறவினை உணர்ந்து உயர்ந்த மனிதன், தன்னையுணர்ந்து தகைமையுறுகின்றான்.

(தொடரும்)

———

## இந்தியா - பாகிஸ்தான் போர்

# நாட்டு மக்கட்கு இந்தியத் தலைமை அமைச்சரின் அறிவிப்பு

"வங்க நாட்டில் நடக்கும் போர் இன்று இந்தியாவுடன் நடத்தப்படும் போராக மாறிவிட்டது. நாட்டைப் போர்ப் பாதையில் செலுத்துவதைத்தவிர நமக்கு வேறுவழி யில்லாமற் போயிற்று'' என்று 3-12-71 இல் நள்ளிரவில் வானொலியில் பேசியகாலை இந்தியத் தலைமை அமைச்சர் இந்திராகாந்தி யவர்கள் குறிப்பிட்டார். அவர் மேலும் பேசியபோது,

"கடந்த மார்ச்சுத் திங்களிலிருந்து நாம் ஒரு பெருஞ் சுமையைத் தாங்கிக்கொண்டு வருகிறோம். வங்க நாட்டு அரசியல் சிக்கலைத் தீர்க்க மக்களாட்சி முறையை விரும்பிய குற்றத்திற்காக, மக்களை அழித்துவரும் கொடுமை நீங்க வேண்டுமென நாம் உலகை வற்புறுத்தி வருகிறோம்.

இப்போது பாகிஸ்தான் நம்மீது முழு அளவில் போர் தொடுத்திருக்கிறது. அமிர்தசரஸ், பத்தான்கோட், ஸ்ரீநகர், அவந்திப்பூர், ஜோத்பூர், உத்தர்லாய், அம்பாலா, ஆக்ரா ஆகிய இடங்களிலுள்ள நம் விண்ணூர்தித் தளங்களைத் திடீரெனப் பாகிஸ்தான் விண்ணூர்திப் படைகள் தாக்கியுள்ளன. இந் நிலையில் நாம் எவ்விதத் தடுமாற்றம் கொள்ளாமலும் கட்டுப்பாட்டுடனும், மிக ஒற்றுமையாகவும் நின்று பாகிஸ் தானின் காரணமற்ற இந்தப் படையெடுப்பைச் சமாளித் தாக வேண்டும்.

இன்று நாம் நம்முடைய நாட்டு ஒற்றுமைக்காக மட்டும் போராடவில்லை. எந்தக் குறிக்கோள்கள் இந்த நாட்டை வலிமையுறச் செய்கின்றனவோ, எந்த எந்தக் குறிக்கோள்களை நோக்கி முன்னேற வேண்டுமோ அந்த அந்தக் குறிக்கோள் களுக்காகவும் போராடி வருகிறோம்.

நாட்டுப் பாதுகாப்புக்காக நம் படை வீரர்களும், மற்றப் படைகளும் திரட்டப்பட்டுள்ளன. எனவே பாகிஸ்தானின் இந்தப் படை யெடுப்பை முறியடிக்க நாம் அனைவரும் ஒன்று பட்டு உறுதி எடுத்துக் கொள்வோமாக'' என்று பேசினார்.

— —

## போர் நிலைபற்றி வானொலியில்
## கலைஞர் முழக்கம்

7-12-71இல் சென்னை வானொலியில் 'கொடி நாள்' உரையாற்றியபோது தமிழக முதல்வர், கலைஞர், டாக்டர் கருணாநிதி யவர்கள் ஆற்றிய உரையின் சுருக்கம் வருமாறு:

"இன்று கொடி நாள். கொடியவர் படை யெடுப்பை எதிர்த்துத் தகர்த்து வெற்றிக்கொடி ஏந்த இந்தியா சூளு ரைக்கும் நாளும் இந் நாளேயாகும்.

தங்கள் மாநில உரிமைகள் நசுக்கப் படுவதைத் தாங்காத கிழக்கு வங்க மக்கள் சென்ற ஆண்டுத் தேர்தலில் மக்களாட் சிக்கு வழி கோலினர். தேர்தல் தீர்ப்பைப் புறக்கணித்து விட்டு வங்க மக்களின் மதிப்புக்குரிய தலைவர் முஜிபர் ரகு மானையும் சிறையிலடைத்துவிட்டு நூருயிரக் கணக்கான கிழக்கு வங்க மக்களின் உயிரையும் பறித்து, ஒரு கோடி மக்களை அகதிகளாக இந்தியாவுக்குத் துரத்திவிட்டு மனித உள்ள மற்ற தன்னிச்சை ஆட்சியை நடத்தியது பாகிஸ்தான்.

மிதிபட மிதிபடப் புழுவும் புலியாகும் என்பதற் கேற்பக் கிழக்குப் பாகிஸ்தான் கிழக்கு வங்கமாகி, கிழக்கு வங்கம் 'பங்காள தேஷ்' எனத் தன்னை ஒரு விடுதலை நாடு என அறிவித்து விட்டது.

'பங்காள தேஷ்' சிக்கலுக்கு அரசியல் தீர்வு காண வேண்டுமென வற்புறுத்தியது இந்தியா செய்த குற்றமாம். அதற்காக அழகுமிகு தாஜ்மகால் ஒளியுமிழும் ஆக்ராமீது குண்டு வீச்சு! ஸ்ரீநகர், ஜோத்பூர் போன்ற இந்திய மண்ணிலே எதிரிகளின் திடீர்த் தாக்குதல்! இந்தியாமீது பாகிஸ்தான் படையெடுப்பு! ஆம்! தூங்கும் புலியை இடறி விட்டார்கள்! இப்போது அதன் விளைவை அனுபவிக் கிருர்கள்.

விரைவில் 'பங்காள தேஷ்'இல் பாகிஸ்தானின் படை இருந்த இடம் தெரியாமல் போகும். இந்திய நாடாளு மன்றத்தில் இந்தியாவின் தலைமை அமைச்சர் இந்திராகாந்தி

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி திருநெல்வேலி

இப் பள்ளியின் நான்காவது ஆண்டு விழாவும், குழந்தைகள் நாளும் 30-11-71 செவ்வாய் மாலை 5 மணி அளவில் நடைபெற்றது. நெல்லை சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் திரு. பி. பத்மநாபன் அவர்கள் இவ் விழாவிற்குத் தலைமை தாங்கினுர்கள். கழக ஆட்சிக் குழு உறுப்பினர் திரு. கா. வ. முத்தையா பிள்ளை அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினுர்கள். விழாவில் சிறுவர், சிறுமியர்களின் கலைநிகழ்ச்சிகளும், ஓரங்க நாடகமும் நடைபெற்றன. வகுப்பில் சிறப்பாகப் படித்த அறுவருக்கும், கலைநிகழ்ச்சி, நாடகம் இவற்றில் சிறப்பாக நடித்த அறுவருள் முதல் பரிசு மூவருக்கும், இரண்டாவது பரிசு மூவருக்கும் திருமதி கலியாணி ரெங்கநாதன் அவர்கள் வழங்கினுர்கள். பள்ளியின் தலைமை யாசிரியை நன்றி கூற விழா இனிது முடிவுற்றது.

## குழந்தைகள் நாள் விழா

குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் மாவட்ட நூலக மண்டபத்தில் 13-11-71இல் நடைபெற்ற குழந்தைகள் நாள் விழாவிற்கு டாக்டர் பா. நடராசன் தலைமை தாங்கினுர். சங்கத் தலைவர் திரு. அழ வள்ளியப்பா வரவேற்புரை நிகழ்த்தினுர். இவ் விழாவில் 16 குழந்தை நூல்கள் வெளியிடப்பெற்றன. நூலாசிரியர்களையும் பதிப்பாளர்களையும் குமாரி குயிலில் இராசேசுவரி அறிமுகம் செய்து வைத்தார்.

சங்கம் நடத்திய போட்டியில், சிறந்த அறிவியல் நூல்களை எழுதியமைக்காக நம் கழக நூலாசிரியரான திரு. என். கே. வேலன் அவர்கட்கு முதற் பரிசு கிடைத்தது என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. அவருக்கு வெள்ளிப் பதக்கத்தைத் திரு. ஏ. வி. மெய்யப்பச் செட்டியார் வழங்கினுர். மற்றும் பரிசுகள் பெற்ருேர்கட்கும் வழங்கப்பெற்றன. நாவல் போட்டியில் முறையே முதலாவது இரண்டாவது மூன்ருவது பரிசுகளை ஈ. எஸ். ஹரிகரன், ஜோதி பர்லதா கிரிஜா, வி. பார்த்திபன் ஆகியோர் பெற்றனர்.

பரிசு பெற்ற எழுத்தாளர்களைத் தம்பி சீனிவாசன் அவையோருக்கு அறிமுகம் செய்து வைத்தார். செயலாளர் செ. க. பாலகுருநாதன் நன்றி கூற விழா இனிது நிறைவேறியது. பரிசு பெற்ற நூலாசிரியர்கட்கு நம் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிருேம்.

———

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

## முருகவேள் பன்னிரு திருமுறை – 6ஆம் தொகுதி

[உரையாசிரியர் : தணிகைமணி, டாக்டர்
வ. சு. செங்கல்வராய பிள்ளை]

இத் தொகுப்பின்கண் கந்தரலங்காரம், கந்தரந்தாதி, திருவகுப்பு, கந்தரநுபூதி, பதினொராந்திருமுறை ஆகியன அடங்கியுள்ளன. ஒவ்வொரு நூலும் முருகன் அருள்கூட்டும் நூல்களாகும். இவற்றுக்குத் தணிகைமணி அவர்கள் சீரிய உரை வரைந்துள்ளனர். முருக அன்பர்கள் இந்நூல்கள் அனைத்தும் ஒருசேரப் படித்தின்பமுறும் வகையில் ஒரே தொகுப்பாகக் கட்டடம் செய்யப்பட்டுள்ளது. முருகவேள் பன்னிரு திருமுறைகளைக் கூறும் தொகை நூல்களுள் இஃது ஆறுவது தொகுப்பாகும். பொது நூலகங்களிலும், அறநிலைய நூலகங்களிலும் இருக்க வேண்டிய இன்றியமையாத நூல்.

உயர்ந்த துணிக்கட்டிடம் விலை ரூ 15-00

## வேல்விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தம்

[உரையாசிரியர் : தணிகை மணி, டாக்டர்
வ. சு. செங்கல்வராய பிள்ளை.]

வேல், மயில், சேவல் ஆகியன முருகப் பெருமான் சிறப்பினை விளக்கும் சின்னங்களாகும். இவை பற்றி அருணகிரிநாதர் அருளிய பாடல்களின் தொகுப்பே இந்நூல். தணிகைமணியவர்கள் இவற்றுக்குச் சீரிய உரை வகுத்துள்ளனர். பாடல்கள் பத்திச்சுவை யூட்டுவன. முருக அன்பர்கள் வாங்கிப் படித்துச் சுவையும் பயனும் காணவல்ல நூல்.

விலை ரூ. 1-50

## ஆலிசின் அற்புத உலகம்

[ஆசிரியர் : என். கே. வேலன், பி. ஏ.,]

ஆங்கிலக் கதையான 'Alis in Wonder Land' என்பதன் தமிழாக்கமே இச் சிறுகதை நூலாகும். ஆலிசு என்னும் சிறுமி காணும் அற்புத உலகம் சிறுவர் அனைவரும் படித்து வியப்பும் மகிழ்ச்சியும் கொள்ளத் தக்கதாகும். படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. பள்ளி நூலகங்களிலும், பொது நூலகங்களிலும் இருக்க வேண்டிய சிறுவர் இலக்கியம்.

விலை ரூ. 3-50

## சிவப்பிரகாச சுவாமிகள் பனுவற்றிரட்டு

அடிக்குறிப்பு விளக்கத்துடன் (அச்சில்)

## தனிப்பாடற்றிரட்டு குறிப்புரையுடன்

5ஆம் புத்தகம் (அச்சில்)

பதிவு எண்: M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.